ரசிகர்களுக்கு
உல்லாசத்தை அளிக்க
தியேட்டர்காரர்கள் பெருமையுடன்
வெளியிடப்போகும் சித்திரம்

ஜூபிடரின்

# மோகினி

எல்லோருக்கும் உகந்த
உல்லாச சித்திரம்....





...தயாரிப்பு...
M.சோமசுந்தரம்





தலை நிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக் காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும் அழிப்பதும். கூந்தலழகையும் முக அழகையும் இன்றே **கேசவர்த்தினியைக்** கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்ப கேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் **கேசவர்த்தினியைவிடச்** சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும் இளமையையும் **கேசவர்த்தினியைக்** கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால் கூந்தலழகையோ **கேசவர்த்தினி** உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

**கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது**

**விலை அணா 14**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்

## தென் இந்திய ரஸாயனசாலை

ஆர். எஸ். புரம் கோயமுத்தூர்

---

# இந்தியாவின் புகழ்




# லோத்ரா

**கர்பாசய ரோக நிவாரணி**

**கேஸரி குடீரம் லிட்., மதராஸ்**

**ஒரிஸ்ஸா, நிஜாம் சமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு, முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :**

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

**பேர்ஹாம்பூர் - செகந்திராபாத்**

**பெஜவாடா - மதுரை**

# இண்டர்நேஷனல் கடிகாரங்கள் புதியதாக வந்தவை....

**IWC**

சரியான நேரத்தைக் காட்டுவதே எந்தக் கடிகாரத்திற்கும் முக்கிய அம்சம். இதற்கு இண்டர்நேஷனல் கடிகாரங்கள் முதன்மை ஸ்தானம் வகிக்கின்றன. ஆனால் சரியான நேரத்தைக் காட்டுவதோடின்றி மிகவும் கவர்ச்சிகரமான அழகிய வடிவத்துடன் கடிகாரத்தை அமைக்க இந்நுண்ணிய வேலைப் பாட்டில் அநேக ஆண்டுகள் தேர்ச்சி பெற்றுள்ள அனுபவம் தேவை. ஆதலால்தான் நீங்கள் எப்போதும் ஒரு இண்டர்நேஷனல் கடிகாரத்தைத் தேர்ந்து எடுப்பதில் மிகவும் சந்தோஷப்படுகிறீர்கள்.



எக்காலத்துக்கும் உகந்த காக்க அமைப்பு—18 காரட் தங்க வேலையுடன் முட்களும் எண்களும் தங்கத்தில் உயர்த்தி அமைக்கப்பட்டவை. செ. 7697. ரூ. 678. இதே ரகத்தில் சாதா டயலுடன் ரூ. 616.

ஆண்களுக்கேற்ற பிரபலமான ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் கேஸுடன் கடிகாரம். செ. 7433 ரூ. 282.

மிகவும் உறுதியாக அமைக்கப்பட்டுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கேஸ் மாடல் செ. 7443. ரூ. 800.





**FAVRE-LEUBA**




பேவர்-லூபா & கம்பெனி லிட்.,
பம்பாய் - கல்கத்தா

ரணத்தை ஆற்றுகிறது, கரகரப்பை

சமனப்படுத்துகிறது.




'ஆல்கோப்லோகிஸ்டின்' வைத்திய முறைப்படி தயாரித்த மருந்து. இது நிமோனியா, இன்ப்ளுயென்சா, வீக்கம், ரணம் முதலிய உபாதைகளுக்கு கைகண்ட மருந்து.

வீட்டில் ஒருடின் மருந்தை வாங்கி வைத்திருங்கள்.

# ஆல்கோப்லோகிஸ்டின்

AL. 501 Tamil

இது ஒரு அலெம்பிக் தயாரிப்பு.




வாழ்க்கையில்
புதிய ஒளி
பண்டிட் டி. கோபாலாசார்லுவின்
ஜீவாம்ருதம்
ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட் மதராஸ் 17




# Nutritious food..

## the nation's demand...

..........உயிர் வாழ காற்றும் நீரும் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் புஷ்டி யுள்ள ஆகாரம். அதேபோல் **மலபார் லிம்டா** சோப்பி லுள்ள சரும போஷாக்கு ஆகாரத்தைத் தன் மேனிக்கு அதிக அவசியமெனக் கருது கிறாள் மங்கை. ஏனெனில் அவள் அழகைப் பாதுகாக்க அதுவே முக்கியமானது.

அதனுடைய நுரை சரு மத்தினுட் புகுந்து அழுக் கையும் வியர்வையையும் அகற்றி வழவழப்பாக தங்கம்போன்ற மேனியை அளிக்கிறது. உங்களுக் குகந்த சோப் அதுவே.









மலபார்

# லிம்டா சோப்

லெவிடபில் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக்கோட்டை

ப்ரொப்ரைடர்ஸ்: சேட். N.P. & கோ. கள்ளிக்கோட்டை.. பம்பாய்-2 சென்னை-1.

கல்கி

# பொருளடக்கம்

மலர் 8 இதழ் 11 | அக்டோபர் 10 | சர்வதாரி ஷு புரட்டாசி 26



மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 11

# என்ன சேதி?

## காங்கிரஸுக்கு ஜே!

இந்த அக்டோபர் 2௳ காந்திமகான் பிறந்த புனித தினத்தில் சென்னை மாகாண முழுவதும் பூரண மதுவிலக்கு அமுலுக்கு வந்தது. சுதந்திர இந்தியாவில் இத்தகைய பெருமையை முதன் முதலில் அடைந்த மாகாணம் சென்னை மாகாணமே யாகும். இந்தப் பெருமையைச் சென்னைக்கு அளித்த ஓமந்தூர் மந்திரி சபைக்கு வாழ்த்துக் கூறுகிறோம். யாரோ டில்லியிலிருந்து சொன்னார்கள் என்பதற்காக இம்மந்திரி சபைகூட மதுவிலக்கைத் தள்ளிப்போட உத்தேசித்தது. அப்போது சென்னைச் சட்டசபை காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் கொஞ்சம் விழித்து எழுந்து உட்கார்ந்து "என்ன சேதி?" என்று கேட்டார்கள். விஷயத்தைக் கேட்டதும், "அதெல்லாம் கூடவே கூடாது. பொது மக்களுக்கு வாக்களித்த பிரகாரம் இந்த வருஷம் பூரண மதுவிலக்குச் செய்தே யாக வேண்டும்!" என்றார்கள். பிறகு மந்திரிகளும் ஜரூர் ஆகி விட்டார்கள். சட்டமும் அமுலுக்கு வந்து விட்டது. மதுவரக்கனுக்கு அடிமையாகி யிருந்த ஏழை மக்களும் அவர்களுடைய பெண்டு பிள்ளைகளும் காந்தி மகானையும் காங்கிரஸையும் வாயார வாழ்த்துகிறார்கள். நாமும் "காங்கிரஸுக்கு ஒரு ஜே!" போட்டுப் பூரண மதுவிலக்குச் சட்டத்தை வரவேற்கிறோம்.

இப்போது சென்னை மாகாணம் அடைந்துள்ள பெருமைக்கு இழுக்கு நேராமல் பாதுகாக்கும் கடமை முக்கியமாகக் காங்கிரஸ் ஊழியர்களுக்கும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் ஏற்பட்டிருக்கிறது. "அவசரப்பட்டுச் சட்டம் செய்தார்கள்; அப்புறம் அலங்கோலமாய் நின்றார்கள்" என்ற அபகீர்த்தி சென்னைக்கு வராமல் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும்.

## கார்ப்பரேஷன் தேர்தல்

சென்னை நகர சபையில் தேர்தல் நடந்து முடிந்து விட்டது. ஸ்ரீ கே. வேங்கடசாமி நாயுடு, ஸ்ரீமதி ராஜம் பாரதி முதலான சில பழைய பிரபல காங்கிரஸ் வாதிகள் வெற்றி யடைந்திருக்கிறார்கள். நெடுங்காலம் நகர சபையிலிருந்த சில பழைய அங்கத்தினர்கள் தோல்வி யடைந்து விட்டார்கள். பொதுப்படையாகப் பார்த்தால், வெற்றி பெற்றவர்கள் தங்களுடைய சொந்த யோக்யதை, செல்வாக்கு, வோட்டுச் சேர்க்கும் திறமை இவற்றினாலேயே வெற்றி பெற்றிருப்பது தெளிவாகிறது. எல்லைக் கமிட்டி என்பதாக ஒரு கமிட்டி ஏற்பட்டு, தமிழ் நாட்டின் எல்லை வகுப்பதை அடிப்படையாகக் கொண்டு பல அபேட்சகர்களைச் சிபார்சு செய்தது. இந்தக் கமிட்டியின் சிபார்சு பெற்றவர்களில் பெரும்பாலோர் தோல்வி யடைந்தார்கள். இதிலிருந்து, மேற்படி எல்லைக் கமிட்டி நல்ல முறையில் அமையவில்லை யென்றும், தக்கமாதிரி சிபார்சுகளைச் செய்யவில்லை யென்றும், சிபார்சு செய்த பிறகு போதுமான வேலை செய்ய வில்லை யென்றும் ஏற்படுகிறது. இத்தகைய உபயோக மற்ற ஒரு கமிட்டி ஏற்பட்டிருக்க வேண்டியதில்லை. ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் போன்ற பழம்பெரும் தலைவர் அதற்கு ஆதரவு கொடுத்திருக்க வேண்டியது மில்லை. இந்தக் கமிட்டி ஏற்பட்டதினாலும் சிபார்சு செய்ததினாலும் பெரிய கெடுதல் ஒன்றும் ஏற்பட்டு விடவில்லை யென்பதுதான் திருப்தி யளிக்கும் அம்சம். ஏனெனில், வெற்றி பெற்றவர்களில் மிகப் பெரும்பாலோர் தமிழர்கள் தான். இவர்களைக் கேட்டால், "சென்னை நகர் தமிழ் நாட்டுக்குச் சொந்தம்" என்றுதான் அபிப்பிராயம் தருவார்கள்.

## பலே போடு போட்டார்!

ஐக்ய நாடுகளின் சபையில் ஸர் ஏ. ராமஸ்வாமி முதலியார் ஹைதராபாத் பிரச்னையைப் பற்றிப் பலே போடு போட்டிருப்பதை நேயர்கள் படித்து மகிழ்ந்திருப்பார்கள். இந்தியாவின் எதிரிகள் அனைவரும் திணறிப் போகும்படியாக இந்தியக் கட்சியின் நியாயத்தை எடுத்துச் சொல்லி யிருக்கிறார். வாழைப்பழத்தில்

ணை ஏற்றுவதுபோலவும் பசுமரத்தில் ஆணி அடிப்பதுபோலவும் தம் தரப்பு வாதங்களைச் சொல்லியிருக்கிறார். எதிரியின் கையில் இருந்த துப்பாக்கியைப் பிடுங்கி அவன் மேலேயே திருப்புவதுபோல, எதிர்க் கட்சியார் சமர்ப்பித்த தஸ்தாவேஜிகளில் உள்ள விஷயங்களைப் படித்துக் காட்டியே அவர்களுடைய கட்சியின் அபத்தத்தை விளக்கிக் காட்டியிருக்கிறார். "இந்திய சர்க்காரின் பலவந்தத்துக்கு நைஜாம் உள்ளாகி விட்டதாகச் சொல்லுவது தப்பு; எட்டு மாதத்துக்கு முன்னாலே ரஸாக்கர்களின் பலவந்தத்துக்கு உள்ளாகிச் சத்தாரி நவாப் மந்திரி சபையை அவர் கலைக்க வேண்டியதாயிற்று; அப்படி ரஸாக்கர்களின் பலவந்தத்துக்கு உள்ளான நைஜாமை இப்போது இந்திய சர்க்கார் விடுதலை செய்திருக்கிறார்கள்" என்று தஸ்தாவேஜிகளைக் கொண்டு நிரூபித்திருக்கிறார்.

ஸர் ஏ. ராமசாமி முதலியாரை நாம் பாராட்டுவதோடு, அவரைப் பொறுக்கி எடுத்து அனுப்பிய இந்திய சர்க்காரையும் பாராட்டுகிறோம். குறுகிய நோக்கங் கொண்ட சின்ன மனிதர்கள் இந்திய சர்க்காரை நடத்தும் பட்சத்தில், "ஸர் ஏ. ராமசாமி முதலியார் தென்னிந்தியர்; மாஜி ஜஸ்டிஸ் கட்சிக்காரர்; பிரிட்டிஷ் சர்க்காரோடு உறவாடியவர்; இப்போது ஒரு சமஸ்தானத்தின் திவானாயிருப்பவர்" என்ற காரணங்களைக் கொண்டு அவரை ஒதுக்கி யிருப்பார்கள். தேச நன்மை ஒன்றையே கருதும் பெருந்தகையாளர் இந்திய சர்க்காரை நடத்துகிறபடியால், பழைய கதையை யெல்லாம் மறந்து விட்டு, வேலைக்குத் தகுந்த ஆள் யார் என்று பார்த்துப் பொறுக்கி அனுப்பினார்கள். ஸர் ஆர்க்காட்டு ராமசாமி முதலியாரின் அறிவாற்றலும் திறமையும் இனிமேலும் தேசத்துக்குப் பயன்படக் கூடிய பல சந்தர்ப்பங்கள் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறோம்.



"அதோ அந்தப் பெரிய மனுஷர் 'எலக்ஷ'னுக்கு நிற்கிறாருங்க!"
"ஓஹோ! அப்படிச் சொல்லுங்க! அவர் பஸ்ஸுக்குத்தான் நிற்கிறாராக்கும் என்று பார்த்தேன்!"

## பிரெஞ்சு இந்தியாவில்......

காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தியினாலும் கணக்கற்ற தேசத் தொண்டர்களின் தியாக சக்தியினாலும் இந்திய தேசம் சுதந்திரம் பெற்று முதல் வருஷ பூர்த்தி விழாவும் கொண்டாடி விட்டோம். கொஞ்சம் சந்தேகத்துக்கிடமாயிருந்த ஹைதராபாத்திலும் இன்று இந்திய சுதந்திரக் கொடி ஆனந்தமாகப் பறக்கிறது. ஆனால் ஆங்காங்கு திருஷ்டி பரிகாரத்தைப்போல் அன்னிய ஆதிக்கத்துக்குட்பட்ட சிற்சில பகுதிகள் இன்னும் இந்தியாவில் இருக்கின்றன. போர்ச்சுகலுக்குட்பட்ட கோவா இருக்கிறது. பிரஞ்சு ஆட்சிக்குட்பட்ட ஐந்து சிறு பிரதேசங்கள் இருக்கின்றன. இவற்றுள் புதுச்சேரியும் காரைக்காலும் தமிழ் நாட்டில் உள்ளவை. பழந் தமிழ்நாட்டுக் கவியரசியும் பரம பக்தையுமான காரைக்கால் அம்மையாரைப் பற்றிக் கேள்விப்படாத தமிழர் யார் இருக்க முடியும்? அந்த உத்தமி பிறந்த காரைக்கால் இன்னும் சுதந்திரம் பெறவில்லை. ஒரு காலத்தில் இந்தியாவின் சுதந்திர வீரர்களுக்கு அடைக்கலம் கொடுத்த புதுச்சேரி இன்னும் அடிமை வாழ்வில் உழல்கிறது. புதுச்சேரி, காரைக்கால் முதலிய ஐந்து பிரஞ்சுப் பிரதேசங்களும் சுதந்திர இந்தியாவோடு சேர்ந்து ஐக்கியப் பட்டாலன்றி இந்தியாவின் சுதந்திரம் பூரணமடைந்ததாகாது.

## ......வஞ்சனை முயற்சி!

சில காலத்துக்கு முன்பு இந்திய சுதந்திர சர்க்காருடனே பிரஞ்சு சர்க்கார் ஓர் ஒப்பந்தத்துக்கு வந்தார்கள். தங்கள் ஆதிக்யத்துக் குட்பட்ட பிரதேசங்களில் பொது ஜன வோட்டு எடுப்பது என்றும் ஜனங்கள் இந்தியாவோடு சேர்ந்துவிட வேண்டும் என்று வோட்டுக் கொடுத்தால் அதற்குத் தாங்கள் குறுக்கே நில்லாமல் மூட்டைகட்டிக் கொண்டு போய் விடுவதாகவும் ஒப்புக் கொண்டார்கள். அப்படி வோட்டு எடுக்கும் சமயத்தில் இந்திய சர்க்காரின் சார்பாகப் பிரதிநிதிகள் வந்து கவனிக்கலாம் என்றும் சொன்னார்கள்.

ஆனால் இப்படி ஒப்புக் கொண்டபோது மனதில் வஞ்சனையுடன் ஒப்புக் கொண்டார்களோ என்ற சந்தேகம் தோன்றும்படியாகக் காரியங்கள் நடந்தன. இந்த

அக்டோபர் 10-ந் தேதி புதுச்சேரியிலும் காரைக்காலிலும் முனிசிபல் தேர்தல்கள் நடத்தத் தேதி குறிப்பிட்டார்கள். இந்தத் தேர்தல்களில் வரும் பிரதிநிதிகளே பிற்பாடு "இந்தியாவோடு சேர்வதா? வேண்டாமா?" என்ற விஷயத்தைத் தீர்மானிப்பார்களாம். ஆகவே, பின்னால் செய்யும் தீர்மானத்தைவிட இப்போது நடக்கும் தேர்தலே முக்கியம் என்று ஏற்பட்டது. இந்தத் தேர்தலைக் கவனித்து மேற்பார்வை செய்ய இந்திய சர்க்காருக்கு வசதி அளிக்கப்படவில்லை.



"அளகப்பனிடம் ஐந்து ரூபாயும் பார்த்தசாரதியிடம் பத்து ரூபாயும் வாங்கினாயே, யாருக்கு அப்பா வோட்டுப் போட்டாய்?"

"தலைக்குப் பாதியாய்க் கிழிச்சுப் போட்டுட்டேனுங்க!"

சாதாரணமாக, புதுச்சேரி காரைக்கால் தேர்தல் எப்படி நடக்கும் என்பது வெகுகாலமாக நாம் நன்கு அறிந்ததே. புதுச்சேரி-காரைக்கால் தேர்தல்களில், தடி யெடுத்தவன் தண்டல்காரன்! பெட்டி அடித்தவன் வெற்றி பெற்றவன்! அதாவது அதிகாலையில் தடிக் கம்புகளுடன் வந்து எந்தக் கட்சியார் பலாத்காரமாக வோட்டுப் பெட்டியைக் கைப்பற்றுகிறார்களோ, அவர்கள்தான் தேர்தலில் ஜயிப்பார்கள். ஏனெனில், பெட்டியைக் கைப்பற்றியவர்கள் தங்களுக்கு எதிர்க் கட்சியார் பெட்டியில் வோட்டுப் போட விட மாட்டார்கள்!

சாதாரணமாகவே இப்படியென்றால், இந்தத் தடவை பிரஞ்சு சர்க்காரே தேர்தல் முடிவில் சிரத்தை கொண்டிருக்கும்போது எப்படி நடக்கும் என்று சொல்ல வேண்டுமா? "இந்தியாவுடன் சேரவேண்டும்" என்று சொல்லுகிற தேசிய காங்கிரஸ் வாதிகளுக்கு எதிராகக் காலிகளையும் கூலிகளையும் திரட்டுவதற்கு பிரஞ்சு சர்க்காரின் அதிகாரமும் இரகசிய நிதியும் தாராளமாக உபயோகிக்கப்படலாம் என்று கருதப்பட்டது. இந்த முறையில் முனிசிபல் தேர்தல் நடந்தபிறகு, அந்தத் தேர்தலில் வரும் பிரதிநிதிகளைக் கொண்டு பொது மக்களின் உண்மையான அபிப்பிராயத்தை எப்படி அறிய முடியும்? ஆகையினால்தான், இப்போது பிரஞ்சு இந்தியத் தேர்தல் நடைபெறக் கூடாது என்றும், ஒத்திப் போட வேண்டும் என்றும் பிரஞ்சு — காரைக்கால் காங்கிரஸ் வாதிகள் கோரினார்கள். இதை நமது இந்திய சர்க்காரும் வற்புறுத்தியதின் பேரில் தேர்தலை ஒத்திப் போடப் பிரஞ்சு சர்க்கார் இணங்கியிருக்கிறார்கள். அந்த வரையில் இணங்கியது விசேஷந்தான்.

## கடமை என்ன?

தேர்தல் எப்போது நடந்தாலும் சரி, புதுச்சேரி — காரைக்காலில் உள்ள தமிழ் மக்களின் கடமை தெளிவானது. சுதந்திரத்தின் விரோதிகள் செய்யும் சண்டித்தனத்துக்கு எதிர் சண்டித்தனம் செய்தாவது தேர்தல்களில் சரியான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த நிலைமையில் சரியான பிரதிநிதிகள் யார் என்று சொல்லவும் வேண்டுமா? "புதுச்சேரியும் காரைக்காலும் பிரஞ்சு ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுச் சுதந்திர இந்தியாவுடன் சேர வேண்டும்" என்று சொல்லுகிறவர்கள்தான். புதுச்சேரியும் காரைக்காலும் இந்தியாவிலிருந்து தனித்து வாழ்வதிலோ, பிரஞ்சு ஆட்சியில் அடிமைகளாயிருப்பதிலோ லாபம் உண்டு என்று சொல்லுகிறவர்களின் பேச்சுக்குச் செவி கொடுக்கக் கூடாது. அப்படிச் சொல்லுகிறவர்கள் சுயநலப் பிண்டங்கள் என்று அறிந்து 'இந்தியாவோடு சேரவேண்டும்' என்று சொல்லும் தேசிய காங்கிரஸ் வாதிகளையே தேர்ந்தெடுக்க வேண்டும்.

மேற்கண்டவாறு நாம் எழுதிய பிறகு காரைக்கால் தேசிய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ என். ஸ்ரீகண்ட ராமானுஜம் அவர்களைப் பிரஞ்சு சர்க்கார் கைது செய்திருப்பதாகத் தெரிகிறது. பிரஞ்சு சர்க்காரின் மனப்போக்கை இதிலிருந்து ஊகித்தறியலாம். புதுச்சேரியிலும் காரைக்காலிலும் வசிக்கும் நம் தமிழ் நாட்டுச் சகோதரர்களுக்கு இச்சமயத்தில் தமிழ் மக்கள் பூரண ஆதரவு அளிக்கவேண்டும்.

# நிகழ்ச்சிச் சித்திரம்













சரி, சரி! இனி "அந்தத் தீவுகளும் நமதே" என்று ஆந்திரர்கள் பாஷாவாரி மாகாணக் கமிஷனிடம் மகஜர் சமர்ப்பிக்க ஆரம்பித்து விடுவார்கள்.
ஆந்திர மகா சபை
மகஜர்


அந்தமான் தீவுகளை ஆராய்ச்சி செய்வதற்காகச் சென்றிருந்த கோஷ்டியினர் திரும்பி வந்து தங்களுடைய அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறார்கள். ஒருவேளை ரஸாக்கர்களுக்கு அந்தமான் சொர்க்கலோகமாக இருக்கும் என்று அவர்கள் சிபார்சு செய்திருக்கிறார்களோ என்னவோ!




உலக சமாதானத்துக்காகப் பாடுபடுவோருக்கு ரூ. 50,000 வெகுமதியளிப்பதாக சேத் டால்மியா அறிவித்திருக்கிறார். அந்தத் தொகையைத் தட்டிக் கொண்டு போக பலமான போட்டா போட்டி இருக்கும்.

# யானையும் யானையும் மோதிக்கொண்டால்...!

"அரபு—யூதர்களிடையே நட்பும் பாலஸ்தீனத்தில் அமைதியும் ஏற்படும்படி செய்ய வேண்டியது உலக வல்லரசுகளின் கடமையாகும். அந்தக் கடமையை நிறைவேற்ற உலக வல்லரசுகளுக்கு இன்றைய நிலைமையிலும் சந்தர்ப்பமிருக்கிறது. ஆனால் அந்தக் கடமையை வல்லரசுகள் நிறைவேற்றத் தவறிவிடுமாயின், பின்னர் பாலஸ்தீனத்தை அன்பும் அஹிம்சையும் உருவான ஏசுநாதர்தான் காப்பாற்ற வேண்டும்!"

பாலஸ்தீனப் பிரச்னையைப் பற்றிச் சில வாரங்களுக்கு முன் நாம் மேற்கூறியவாறு குறிப்பிட்டிருந்தோம்.

ஆனால், பாலஸ்தீனப் பிரச்னையைக் காட்டிலும் பதினாயிரம் மடங்கு கஷ்டமான காரியத்தைச் செய்ய வேண்டிய பொறுப்பு இப்போது ஏசுநாதருக்கு ஏற்பட்டிருக்கிறது. அதாவது பாலஸ்தீனத்தை மாத்திரமின்றி, உலக வல்லரசுகளையும் சேர்த்துக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு! இன்று அவரது தலையில் சுமந்திருக்கிறது!

டச்சு—இந்தோனேஷ்யா தகராறையோ, பாலஸ்தீன அமளியையோ, காஷ்மீரப் பிரச்னையையோ தீர்த்து வைக்கத் தவறிய வல்லரசுகள் அடங்கிய ஐக்கிய நாடுகள் சபைக்கு, மேற்படி வல்லரசுகளின் பிணக்கையே தீர்த்து வைக்கவேண்டிய வெட்கக்கேடான நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது.

உலக நாடுகளிடையே ஏற்படும் வழக்குகளைத் தீர்த்து உலகத்தில் அமைதியை நிலை நிறுத்துவதற்கென்றே ஐ. நா. சபை பிரமாதமான ஆடம்பரத்துடன் நிறுவப்பட்டது. சர்வ தேச வழக்குகளை விசாரித்து நீதி வழங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட அந்தச் சபையை ஒரு விதத்தில் சர்வதேச நீதிச் சபை எனலாம். அதில் நீதிபதிகளாக வல்லரசுகளின் பிரதிநிதிகள் நிரந்தரமான இடம் பெற்றனர்.

ஆனால், உலக தேசங்களின் வழக்குகளைத் தீர்த்து வைக்கவேண்டிய அந்த நீதிபதிகள் இப்போது தங்களுக்குள் அடித்துக் கொண்டு நிற்கிறார்கள்! தங்களுக்குள் இருந்து வரும் தகராறுகளையோ, அபிப்பிராய வேற்றுமைகளையோ தீர்த்து சமரசமான முடிவைக் காணச் சக்தியும் திறமையும் இல்லாத வல்லரசுகளால், உலக நாடுகளின் வழக்குகளைத் தீர்த்து நீதி வழங்குவது எவ்வாறு சாத்தியமாகப் போகிறது?

* * *

பல வாரங்களுக்கு முன் பெர்லினில் மூண்ட நெருக்கடி இன்னும் தீரவில்லை.

ஜெர்மனியின் தலைநகரான பெர்லினில் தங்களுக்குத்தான் பூரண அதிகாரம் உண்டு என்று ருஷ்யர்கள் சொல்லுகிறார்கள். அந்த அதிகாரத்தில் தங்களுக்கும் பங்கு இருக்க வேண்டும் என்று அமெரிக்கா, பிரிட்டிஷ், பிரஞ்சு அதிகாரிகள் கோருகின்றனர்.

அவ்விஷயமாக வல்லரசுகளுக்குள் நடந்த சமரசப் பேச்சுகளெல்லாம் வியர்த்தமாகி விட்டன. அமெரிக்க, பிரிட்டிஷ், பிரஞ்சு பிரதிநிதிகள் இறுதியாக ஸ்டாலினையும் பேட்டி கண்டு பல நாட்கள் வரையில் முறையிட்டனர். ஸ்டாலின் அவர்களுடன் அளவளாவிப் பேசினார். சமரசம் ஏற்படப் போகிறது, ஏற்பட்டுவிடும், ஏற்படாமல் போகாது என்றெல்லாம் பத்திரிகைச் செய்திகள் கூறின. ஆயினுமென்ன? இறுதியில் பலன் 0 என்றாகிவிட்டது!

எனவே, அவர்கள் தங்களுடைய வழக்கை ஐக்கிய நாடுகள் சபைக்கே கொண்டு வந்திருக்கிறார்கள்!

சந்தேகத்துக்குச் சிறிதும் இடமில்லாத ஹைதராபாத், காஷ்மீரப் பிரச்னைகளையே உருத் தெரியாமல் குழப்புவதில் கைதேர்ந்த ஐ. நா. சபை,—வல்லரசுகளால் ஆட்டி வைக்கப்படும் ஐ. நா. சபை, சிக்கல்களுக்கெல்லாம் சிக்கலான வல்லரசுகளின் பிரச்னையை எவ்வாறு தீர்த்து வைக்கப் போகிறதோ?

ஐக்கிய நாடுகளிலுள்ள ஜனங்களைக் காப்பாற்றுவதற்காக ஏற்பட்ட மேற்படி சபை, ஹைதராபாத்திலுள்ள ஒன்றரைக் கோடி ஜனங்களை அடியோடு மறந்து விட்டு எதேச்சாதிகார

ஆட்சியின் உருவாக விளங்கியவரும் ஒரு தனிமனிதருமான நைஜாமுக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு பேசிய கபட நாடகத்தை உலகம் கண்டு நகைத்து இன்னும் சில நாட்கள் கூடச் செல்லவில்லை.

அணுவளவும் ஐயந்திரிபுக்கு இடமற்ற அவ்விஷயத்தில் கூட நீதி நெறியுடன் நடந்து கொள்ளும் நேர்மையற்ற அந்தச் சபை, பிரம்ம தேவனும் தீர்க்க முடியாத சிக்கல்களும் செடுக்குகளும் நிறைந்த வல்லரசுகளின் தகராறை எப்படித் தீர்க்கப் போகிறதோவென்று உலகம் கலங்குவது இயற்கையே.

* * *

பிரிட்டனும் பிரான்ஸும் அமெரிக்காவின் தயவையே நாடிவருகின்றன என்பதும், அமெரிக்காவின் போக்கை அனுசரித்தே தங்களுடைய கொள்கையை உருவகப்படுத்தி வருகின்றன என்பதும் உலகறிந்த உண்மை.

எனவே, இப்போது ஏற்பட்டுள்ள தகராறு முழுதும் அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்குமிடையேதான்.

ருஷ்யாவின் அரசியல் சாணக்கியத்தை அறிந்து கொள்ளவே முடியவில்லையென்றும், ருஷ்யாவைக் கண்டு தாங்கள் பீதியடைவதாகவும் அமெரிக்க, பிரிட்டிஷ், பிரஞ்சு சர்க்கார் பிரதிநிதிகள் பகிரங்கமாகக் கூறி வருகிறார்கள்.

உலகமானது எதிர்காலத்தில் கோரமான அணுகுண்டு யுத்தத்துக்கு இலக்காகும்படி நேருமாயின், ஒரே ஒரு வல்லரசுதான் அதற்குக் காரணமாக இருக்கும் என்று பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி பெவின் கூறுகிறார். அவர் ருஷ்யாவையே அவ்வாறு குறிப்பிடுகிறார் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

அமெரிக்காவின் அணுகுண்டு பலத்தைக் கண்டு ருஷ்யாவும், ருஷ்யாவின் அரசியல் ஆயுத பலத்தைக் கண்டு, அதாவது பல தேசங்களிலும் பொது உடைமைக் கொள்கை பரவி வருவதைக் கண்டு அமெரிக்காவும் பரஸ்பரம் பீதி கொண்டிருக்கின்றன.

அதைத் தவிர, ருஷ்யாவுக்கு அணுகுண்டு இரகசியம் தெரிந்து விட்டதோவென்றும் அமெரிக்கா முதலிய வல்லரசுகள் கலங்குகின்றன.

அதனால்தான் ஐ. நா. சபையில் ருஷ்யப் பிரதிநிதி, அணுகுண்டுக் குவியலை நாசம் செய்ய வேண்டும் என்று அமெரிக்கப் பிரதிநிதியிடம் கூறுகிறார்.

"ருஷ்யாவுக்கு அணுகுண்டு இரகசியம் தெரியுமா?" என்று அமெரிக்கப் பிரதிநிதி கேட்கிறார்.

மகத்தான பலம் பொருந்திய அந்த இரண்டு வல்லரசுகளுக்கும் ஒன்றன் மீதொன்று ஏற்பட்டுள்ள பீதியே இன்றைய சர்வதேச நெருக்கடிக்குக் காரணமாகும்.

அணுகுண்டுக் கட்டுப்பாடு பற்றி ஒரு திருப்திகரமான முடிவு ஏற்பட்டு விட்டால் வல்லரசுகளுக்குள்ள தகராறு பெரிதும் தீர இடமுண்டாகும். ஆனால், அவ்விஷயமாக இரண்டு வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட முட்டுக்கட்டை இன்னும் தீர்ந்தபாடில்லை.

* * *

மனிதகுலமும் நாகரிகமும் உலகில் அழியாமல் இருக்க வேண்டுமாயின் மூன்றாவது உலக மகாயுத்தம் ஏற்படாமல் தவிர்க்கப்பட வேண்டும். மூன்றாவது மகாயுத்தம் ஏற்படுவதைத் தடுக்க முடிந்தாலும் முடியாவிட்டாலும் அணுகுண்டு யுத்தத்தைத் தவிர்க்க வேண்டியது அத்தியாவசியமாகும்.

இந்த பயங்கரமான உண்மையை வல்லரசுகள் உள்பட ஐ. நா. சபை அங்கத்தினர்கள் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

முன்பு தோன்றி மறைந்த சர்வதேச சங்கத்தில் ஆயுதப் பரிகரணத் திட்டம் நிறைவேறாமல் போயிற்று. இப்போது தோன்றியுள்ள ஐ. நா. சபையிலும் ஆயுதப் பரிகரணத் திட்டம் நிறைவேறவில்லை.

அது நிறைவேறாவிட்டாலும் அணுகுண்டு யுத்த முறையை ஒழிப்பதில் மேற்படி சபை வெற்றி பெற்றாலன்றி,— அணுகுண்டு பலம் வாய்க்கப்பெற்ற பிரம்மாண்டமான வல்லரசுகள் மோதிக் கொள்ளாமல் தடுக்கப்பட்டாலன்றி எதிர்கால உலகம் எக்கதிக்கு உள்ளாகும் என்பது பற்றி எதுவும் சொல்லுவதற்கில்லை.

எனவே, அவ்விஷயத்தில் அதாவது அணு சக்தியைக் கட்டுப்படுத்தி அது ஆக்க வேலைகளுக்கு உபயோகப்படும்படி செய்வதில் ஐ. நா. சபையின் முயற்சி நிறைவேற வேண்டும்.

அந்தச் சபையின் எதிர்காலமும், வல்லரசுகளின் க்ஷேமமும் மாத்திரமல்ல; உலக மக்களின் க்ஷேமமும், மானிட நாகரிகம் அழிந்து மறையாமல் பாதுகாக்கப்படுவதும் அந்த முயற்சி வெற்றி பெறுவதையே பொறுத்திருக்கின்றன.

# உலைக்களத்தில் கம்பர்

"எனக்குச் சக்ராயுதம் வேண்டுமே சக்ராயுதம்!" என்று ஜபித்துக் கொண்டேயிருக்கிறார் திருமால்!

அவருக்குப் பக்கத்தில் சிவபெருமான் "எனக்கு மழு வேண்டும்; மழு!" என்று மழுவாயுதத்திற்காகக் கால் கடுக்கத் தவஞ் செய்கிறார்.

கோழிக் கொடி படைத்த முருகப்பெருமான் கிரௌஞ்சகிரியைத் துளைக்க "வேல் வேண்டும், வேல் வேண்டும்"




என்று துடியாய்த் துடிக்கிறார் — அந்த உலைக் களத்தில்.

அவருக்குப் பக்கத்தில் நான்முகன், "எனக்கு ஒரு எழுத்தாணி அருள மாட்டாயா? உனக்கு ரொம்பப் புண்ணியமுண்டு!" என்று இறைஞ்சுகிறார். (பிறப்பதற்கு முன்னால் குழந்தைகளின் தலையில் எழுதி விடத்தான்!)

இவர்கள் எங்கே போய் யாரை இப்படி இறைஞ்சுகிறார்கள்? தேவ தேவர்களாகிய இவர்களே நேரில் வந்து காத்துக் கிடக்கக் கூடிய பாக்கியம் பெற்ற கொல்லன்தான் யார்? அவன் எங்கே இருக்கிறான்?

இந்தக் கேள்விகளுக் கெல்லாம் கவிச் சக்கரவர்த்தி கம்பர் பதில் சொல்லுகிறார்.

> ஆழியான் ஆழி,
> அரன் மழுத்தான் என்பார்,
> கோழியான் குன்றெறிய
> வேலென்பான்—ஊழியான்
> அங்கை எழுத்தாணி
> அருள்என்பான், மாவண்டூர்ச்
> சிங்கன் உலைக்களத்திற்
> சென்று!

மாவண்டூரிலிருக்கும் சிங்கன் என்ற கொல்லனது உலைக்களத்துக்கு வந்து மும்மூர்த்திகளும் முருகப் பெருமானும் தங்கள் தங்கள் ஆயுதங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்களாம்!

ஆயிரம் வருஷங்களுக்கு முன் கவிச் சக்கரவர்த்தி கம்பர் மாவண்டூர் என்னும் ஊரில் தங்கும்படி நேர்ந்தது. அப்பொழுது அவருடைய எழுத்தாணி காணமற் போய் விட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார். பக்கத்தில் இருந்தவர்கள் சிங்கனிடம் சொன்னால் எழுத்தாணி கிடைக்குமென்றார்கள்.

மனித இயல்பை உணரக் கூடிய கவிஞனுக்கு கொல்லர்களின் குணாதிசயம் தெரியாமலா இருக்கும்? 'இன்றைக்கு எழுத்தாணி வேண்டுமென்று சொன்னால் ஏழு வருஷம் கழித்தல்லவா கொடுப்பான்? அதுவும் சட்டிகளும் வேல்களும் செய்யக்கூடிய கொல்லன் கவிஞனின் எழுத்தாணியையா சீக்கிரம் செய்து கொடுப்பான்?' என்று எண்ணினார். இருந்தாலும் 'கேட்பது கேட்டு வைப்போம், கிடைக்கும்போது கிடைக்கட்டும்' என்று எண்ணி ஒரு எழுத்தாணிக்குச் சொல்லியனுப்பினார்.

சில சமயம் எதிர்பாராத விதமாகப் பல காரியங்கள் நடந்து விடுகின்றன. அது போல், கவிச் சக்கரவர்த்தி கம்பருக்கு எழுத்தாணி தேவை என்று கேள்விப் பட்டதும் சிங்கன் உடனே ஒரு நல்ல எழுத்தாணி செய்து அதற்கு அழகான பூண் அமைத்து மறுநாட் காலையில் கொண்டு வந்து கொடுத்து விட்டான்.

கம்பருக்கு ஏற்பட்ட வியப்பானல் கொஞ்ச நஞ்சமல்ல! அந்த வியப்பிலும் மகிழ்ச்சியிலும் கொல்லன் சிங்கனைப் பாராட்டி மேற்கண்டவாறு பாடினார்.

வருஷம் ஆயிரம் ஆகிறது! கம்பர் பெயருடன் சிங்கன் பெயரும் நிலைத்து நிற்கிறது.

"மேற்கூறிய பாடலைப்போல ஒரு கவியைத் தந்தவருக்கு ஆண்டு தோறும் விழாக் கொண்டாடலாம்!" என்று ரசிகமணி டி. கே. சி. அவர்கள் கூறுவார்கள். கம்பரோ ஆயிரக்கணக்கான பாடல்கள் பாடியிருக்கிறார்! நானது அக்டோபர் மாதம் 8, 9, 10உ தேதிகளில் சென்னை ராஜாஜி மண்டபத்தில் கம்பருக்கு விழாக் கொண்டாடுகிறார்கள். வருஷத்தில் முன்னூற்று அறுபத்தைந்து நாளும் கொண்டாட வேண்டிய விழாவை மூன்று நாளாவது கொண்டாடுவது பற்றி மகிழ்ச்சியடைகிறோம்.

# சூழ்ச்சி ஒழியவில்லை!

காட்டூர் கண்ணன்

கார்ப்பொரேசன் கவுன்சிலுக்கு நில்லு நீயின்னு
கட்டாயப் படுத்தினாங்க பேட்டை வாசிங்க
சீர்திருத்தம் செய்யணுன்னு இந்த டிவிசனை
சரியான ஆளு நீதான் என்று சொன்னாங்க

பட்டம்பதவிக் காசைப்பட்டு நிக்க நினைக்கல்லே
பாட்டாளி மக்களுக்காய்ப் பரிந்து பேசவும்
திட்டமிட்டு இரண்டிலொன்று தீர்த்துக் கட்டவும்
தீரமுடன் நின்னுப்பிட்டேன் செலவைப் பாக்கல்லே

எத்தனையோ கட்சியிலே இருந்து பார்த்துட்டேன்
இல்லாத கட்சிஒண்ணைக் கிளப்பி விட்டுட்டேன்
பச்சைநிறம் சிவப்புநிறம் எல்லாம் கலந்த
பஞ்சவர்ண ஓட்டுப்பெட்டி வைக்க எண்ணிட்டேன்

பஞ்சவர்ணப் பெட்டியிலே ஓட்டைப் போடுங்க!
பஞ்சநதம் மெம்பரானு யோகம் பாருங்க!
கொஞ்சநாளில் தெருவிலுள்ள குடிசைக ளெல்லாம்
கோபுரமாய் மாறிவிடும் என்று சொன்னேங்க!

வெள்ளைவைத்த சுவரைக்கண்டால் கரியை யெடுத்து
விதவிதமாய் எழுதஒரு ஆளைப் பிடிச்சேன்
பள்ளிக்கூடப் பசங்ககிட்டே நோட்டீசு தந்து
பறக்கும்படி விட்டெறிந்து பிடிக்கவும் சொன்னேன்

இத்தனையும் செய்தப்புறம் ஓட்டர் லிஸ்டிலே
இல்லையப்பா பேருயின்னு இடி விழுந்தாப்போல்
சொல்லியென்னைத் தள்ளிட்டாங்க சூது பாருங்க!
சூழ்ச்சியின்னும் ஒழிஞ்சிடல்லே சுதந்திரம் வந்தும்!

★ ○ ★



# ஆனந்தக் கூத்து ஆடுங்கள்!





அக்டோபர் மாதம் இரண்டாந் தேதி காந்தி மகான் பிறந்த புண்ணிய தினத்தில் நமது மாகாணம் பூராவும் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது. அன்று செங்கற்பட்டு ஜில்லாவில் கனம் பக்தவத்ஸலம் முன்னிலையில் நடந்த கொண்டாட்டங்கள் சிலவற்றை இங்கே காணலாம்.

★

# அலை ஓசை

## கல்கி

### பதினாறும் அத்தியாயம்

## தேவபட்டணம் தேர்தல்

"என் உயிருக்குயிரான அருமைத் தோழி சீதாவுக்கு. உன்னுடைய அன்பான கடிதம் கிடைத்தது. நீங்கள் எல்லாரும் தாஜ்மகாலுக்குப் போனது பற்றியும் ஆக்ரா கோட்டையில் பார்த்த அதிசயங்களைப் பற்றியும் விவரமாக எழுதியிருந்ததைப் படித்து அளவில்லாத சந்தோஷம் அடைந்தேன். ரொம்ப ரொம்ப வந்தனம். அதையெல்லாம் படித்தபோது எனக்கு உங்களுடன் வந்து எல்லாக் காட்சிகளையும் பார்த்தது மாதிரியும் இருந்தது. உங்களுடன் வந்து நேரில் பார்க்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருத்தமாயும் இருந்தது. அந்த பாக்கியம் எனக்கு எப்போது கிடைக்குமோ, தெரியவில்லை. இந்த ஜன்மத்தில் கிடைக்கும் என்றே தோன்றவில்லை. **இவரிடம்** நீங்கள் எல்லாரும் தாஜ்மகால் பார்த்தது பற்றிச் சொல்லி, "எப்போதாவது நாமும் போய் வரலாமா?" என்று கேட்டேன். வழக்கம் போல் தூக்கி எறிந்து பேசிவிட்டார். "நம்முடைய தமிழ் நாட்டில் பார்க்க வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. தஞ்சாவூர்ப் பெரிய கோவிலைப் பார்க்கவில்லை; மாமல்லபுரத்துக் கற்கோயில்களைப் பார்க்கவில்லை. தாஜ்மகால் பார்க்காததுதான் குறையாய்ப் போய் விட்டதாக்கும்!" என்றார். இவரிடம் ஏன் சொன்னோம் என்று ஆகிவிட்டது. எங்கள் பேச்சை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த என் மாமியார் வேறே ஆரம்பித்து விட்டாள். "ஏதோ காசி, ராமேசுவரம் போகவேண்டும் என்று ஆசைப்படுவார்கள்; கேட்டதுண்டு. அந்தமாதிரி புண்ணிய ஸ்தலங்களுக்குப் போனால் போகிற கதிக்காவது பிரயோஜனமாக இருக்கும். துலுக்க ராஜாக்கள் கட்டி வைத்த சமாதிகளைப் பார்க்க வேண்டுமென்று யாராவது ஆசைப்படுவார்களா? இந்தக் காலத்துப் பெண்களுடைய புத்தி ஏன்தான் இப்படியெல்லாம் போகிறதோ, தெரியவில்லை?" என்று ஒரு நாளெல்லாம் எனக்கு மண்டகப்படி செய்து கொண்டிருந்தாள். வெறும் வாயை மெல்லுகிறவளுக்கு ஒரு பிடி அவல் கிடைத்தது போல ஆயிற்று.

வளைகாப்புக் கல்யாணத்துக்குப் பிறகு நான் இங்கே வந்ததிலிருந்து என்னுடைய நிலைமை முன்னைவிட

ரொம்ப மோசமாயிருக்கிறதடி, சீதா! நான் என்னவென்று சொல்லுவேன்? ஒரு விஷயத்தைக் கேள்!

எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் தாமோதரம் பிள்ளை என்று ஒருவர் இருக்கிறார். அவரும் வக்கீல்தான். என் மாமனாரும் அவரும் வெகுகாலம் ரொம்ப சிநேகிதமா யிருந்தார்களாம். தாமோதரம் பிள்ளையின் மகனுக்கு அமரநாத் என்று பெயர். அமரநாத்துக்கும் இவருக்கும் ரொம்ப சிநேகிதம். நம்ம சூரியா இங்கே படித்த போது மூன்று பேரும் சேர்ந்தாற் போலேயே இருப்பார்களாம்.

அமரநாத்துக்கு இரண்டு வருஷத்துக்கு முன்னால் கலியாணம் நடந்தது. பெண், திருநெல்வேலிப் பெண். அவளுடைய தகப்பனார் டிபுடி கலெக்டராம். நம் இரண்டு பேரையும்விட அதிகமாகப் படித்தவள். ஆறாவது பாரம் பாஸ் பண்ணி அப்புறம் காலேஜில்கூட ஒரு வருஷம் படித்தாளாம். ரொம்ப நல்லவள்; தங்கமான குணம். படித்திருக்கிறோம் என்கிற கர்வம் கொஞ்சம்கூடக் கிடையாது. அவளுடைய கலியாணத்தின் போதே எனக்கும் அவளுக்கும் பழக்கம் ஏற்பட்டது. ஒரு வருஷத்திற்கு முன்னால் அவள் இந்த ஊருக்கு வந்ததிலிருந்து அவள் எனக்கு சிநேகிதியானாள். உன்னைப் போன்ற பிராண சிநேகிதி யில்லாவிட்டாலும் பேச்சுத் துணைக்குச் சௌகரியமா யிருந்தது. வெளியில் எங்கும் போகாமல், வீட்டிலேயே அடைந்து கிடந்த எனக்கு, சித்ராவின் சிநேகிதம் ஆறுதலா யிருந்தது. தினசரி நாலுவது அவள் வீட்டுக்குப் போவேன். அல்லது அவளாவது எங்கள் வீட்டுக்கு வருவாள். இம்மாதிரி நாங்கள் சிநேகமானது எங்கள் அகத்துக் காரர்களுக்கும் ரொம்ப சந்தோஷமா யிருந்தது.

சீதா! அதெல்லாம் இப்போது பழங் கதையாகப் போய் விட்டது. இப்போது நாங்கள் ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போவதில்லை. ஒருவரை யொருவர் பார்ப்பதுமில்லை; பேசுவதுமில்லை. காரணம் என்ன தெரியுமா? நான் ராஜம்பேட்டைக்குப் போயிருந்த போது இந்த ஊரில் முனிசிபாலிடி எலெக்ஷன் வந்ததாம். அந்த எலெக்ஷனில் எதிர்வீட்டுத் தாமோதரம் பிள்ளை நின்றாராம். என் மாமனாருடைய இன்னொரு சிநேகிதரான ராஜா ராமையர் என்பவரும் நின்றாராம். என் மாமனார் ராஜாராமய்யருக்காக வேலை செய்தாராம். ஏதோ ஒரு மீட்டிங்கில் தாமோதரம் பிள்ளையை 'வெள்ளைக்காரனுக்கு வால் பிடிக்கிறவன்' என்று சொன்னாராம். அதற்காகத் தாமோதரம் பிள்ளை இவரைப் 'பாப்பாரப் புத்தியைக் காட்டி விட்டான்!' என்று திட்டி விட்டாராம். இதிலிருந்துசண்டை முற்றி விட்டது. இப்போத இரண்டு குடும்பத்துக்கும் பேச்சு வார்த்தையுமில்லை; போக்கு வரத்துமில்லை. முப்பது வருஷமாக சிநேகிதர்களா யிருந்தவர்கள் இப்போது 'குத்து வெட்டு' என்கிற நிலைமைக்கு வந்து விட்டார்கள்.

அடியே! சீதா! வயதானால் புத்தி கெட்டுப் போய் விடுமோடி! முனிசிபாலிடி என்றால், குப்பைத் தொட்டி கூட்டுகிற சமாசாரமாம்! தொட்டிகளை வைத்துத் தெருக்கூட்டும் வேலையைச் சரியாய்ச் செய்வதற்குத் தான் முனிசிபாலிடியாம்! சம்பளம் கிடையாதாம்! இந்தக் குப்பை கூட்டுகிற பதவிக்காக இப்படி இவர்கள் சண்டை போட்டுக் கொள்ள வேண்டுமா என்று ஆச்சரியமாயிருக்கிறது. இதன் காரணமாக எனக்கு இங்கே கிடைத்திருந்த ஒரு சிநேகிதியையும் இழந்து விட்டேன். சற்று நேரம் எதிர் வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொண்டிருப்பதும் போய் விட்டது. வீடு அசல் ஜெயிலைப்போல் ஆகி விட்டது.

என்னுடைய கதை இருக்கட்டும், சீதா! நீ ரஜனிபூருக்குப் போனது பற்றிச் சுருக்கமாக எழுதியிருந்தாய். ஏரியில் விழுந்து ஆபத்தில்லாமல் எழுந்ததாக எழுதியிருந்தாய். ஏதோ தமாஷ் என்று நானும் எண்ணினேன். ஆனால் சூரியா எழுதியிருந்த கடிதத்திலிருந்து உண்மை தெரிந்தது. பெரிய கண்டத்திலிருந்து நீ தப்பிப் பிழைத்தாயாமே? அதென்னடி, உன் அகத்துக்காரர் படகிலேயே இருந்து விட்டார்? யாரோ தாரிணி என்று ஒருத்தியாம், அவள் உங்களோடு படகில் வந்தாளாம், அவள் தான் ஏரியில் குதித்து உன்னைக் காப்பாற்றினா

ளாமே? அவன் மட்டும் இருந்திரா விட்டால் உன்னுடைய கதி என்ன ஆகியிருக்கும்? என்னுடைய கதிதான் என்ன ஆகியிருக்கும்? ஏதோ ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் எனக்கு நல்லகாலம் பிறக்கும், உன்னோடு கொஞ்ச நாள் தங்கி யிருக்கலாம், டில்லி-ஆக்ரா எல்லாம் பார்க்கலாம், — என்று ஆசைப் பட்டுக் கொண்டிருக்கிறேன். நீ இப்படியெல்லாம் உன்னை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்வது நன்றாயில்லை.

உன் அகத்துக்காரரை நான் எப்போதாவது பார்க்க நேர்ந்தால், அவரை நன்றாகத் திட்டுவது என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆண் பிள்ளைக்கு நீந்தத் தெரிய வேண்டாமா? நீந்தத் தெரியாவிட்டாலும், அப்படியா பார்த்துக் கொண்டு படகிலேயே உட்கார்ந்திருப்பது!

இவரிடம் நேற்றுச் சொன்னபோது, ரொம்பவும் வருத்தப்பட்டார். உன் அகத்துக்காரர் பேரில் கோபமும் பட்டார். "அவனும் ஒரு ஆண்பிள்ளையா?" என்றும் கேட்டு விட்டார். இவர்பேரில் எனக்கு எவ்வளவோ குறை இருக்கிறது. ஆனாலும் இந்த மாதிரி நிலைமையில் இவர் சும்மா யிருந்திருக்கமாட்டார் என்பது நிச்சயம். சென்ற வருஷம் இந்த ஊர்க் காவேரி வெள்ளத்தில் ஒரு சிறு பெண் முழுகிச் செத்துப்போக இருந்தாளாம். இவர்தான் தைரியமாகக் காவேரியில் குதித்து நீந்திப்போய் அவளைக் கரை சேர்த்து உயிர் பிழைக்கச் செய்தாராம். இது விஷயத்தைப் பற்றி இந்தத் தேவ பட்டணம் முழுவதும் சென்ற வருஷத்தில் பெருமையாகப் பேசிக் கொண்டார்கள் உன்னுடைய அகத்துக்காரர் அப்படி நடந்துகொண்டது பற்றி எனக்கு உண்மையாகவே கோபமா யிருக்கிறது, சீதா!

சூரியாவைக்கூட நான் நன்றாகத் திட்டிக் கடிதம் எழுதி யிருக்கிறேன். உங்களோடு ஆக்ராவுக்கு வந்தவன் ராஜன்பூருக்கு வராமல் எதற்காகத் திரும்பி வரவேண்டும்? அப்படி என்ன தலைபோகிற காரியம் அவனுக்கு? இனிமேல் அப்படியெல்லாம் செய்யக் கூடாது என்றும், உன்னைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் எழுதி யிருக்கிறேன்.

சீதா! நீயும் அவனைக் கொஞ்சம் கவனித்துக்கொள். சூரியாவை நினைத்தால் எனக்குப் பரிதாபமா யிருக்கிறது. ஊரை விட்டு, நாட்டை விட்டு, வீடு வாசலை விட்டு, டில்லிப் பட்டணத்துக்குப்போய், நல்ல சாப்பாடுகூடக் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருக்கிறான். ஒரு அதிசயத்தைக் கேள்! என்னிடம் ஏதாவது பணம் இருந்தால் அனுப்பும்படி எழுதியிருக்கிறான். அல்லது என் கணவரிடம் கேட்டு வாங்கியாவது அனுப்பும்படி எழுதி யிருக்கிறான். பணம் வேண்டும் என்று வீட்டுக்கு எழுதவும் மாட்டானாம்; அப்பா பணம் அனுப்பினால் பெற்றுக்கொள்ளவும் மாட்டானாம். இந்த மாதிரி பிள்ளை எங்கேயாவது உண்டா? கொஞ்சம் சூரியாவை எனக்காகப் பார்த்துக்கொள்.

குழந்தை வஸந்தி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறாள் என்று நம்புகிறேன். சமர்த்தாகப் பேசி விளையாடிக் கொண்டிருக்கிறாளா?

வஸந்தி பிள்ளைக் குழந்தையாகப் பிறந்திருந்து எனக்குப் பிறப்பது, பெண்ணாக இருக்கக் கூடாதா என்று அடிக்கடி எனக்குத் தோன்றுகிறது. எதற்காக என்று சொல்ல வேண்டுமா? பிதிரை நீயே அவிழ்த்துக்கொள்.

இப்படிக்கு
உன் பிராண சகி
**லலிதா"**

மேற்கண்ட கடிதத்தைச் சீதா படித்துவிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தாள். இரவு மணி 8-30 ஆகி யிருந்தது. இன்னும் அவர் ஏன் வரவில்லை? தானும் குழந்தையும் வீட்டில் தனியாக இருக்கிற நாளாகப் பார்த்துத்தானா அவரும் வழக்கத்தைவிட நேரம் கழித்து வீட்டுக்கு வரவேண்டும்?

ஆம்; அன்று சீதாவும் குழந்தையும் தன்னந் தனியாக அந்தப் புதுடில்லி வீட்டில் இருந்தார்கள். இதன் காரணம் என்னவென்பதை அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

## பதினேழாம் அத்தியாயம்

# "லலிதா! பயமாயிருக்கிறது....!"

ஜூன் மாத ஆரம்பத்தில் புது டில்லியில் வெப்பநிலை 110 டிக்ரிக்கு வந்திருந்தது. பகலில் வெளியில் கிளம்பியவர்கள் சுண்ணாம்புக் காளவாயில் தங்களைப் போட்டு விட்டதுபோல் தவித்தார்கள். இரவில் வீட்டில் இருந்தவர்கள் செங்கல் சூளையில் போடப்பட்டவர்களைப் போல் வெந்தார்கள். பகலிலும் சரி, இரவிலும் சரி, காற்று அடித்தால் நெருப்பாக அடித்தது. எந்தப் பொருளைத் தொட்டாலும் தணலைப்போல் சுட்டது. விளாமிச்ச வேர் தட்டிகளில் விடப்பட்ட ஜலம் கீழே சொட்டும்போது வெந்நீராக மாறிச் சொட்டியது!

புது டில்லியில் வீற்றிருந்து இந்திய தேசத்தின்மீது செங்கோல் செலுத்தி வந்த வைஸராய்ப் பிரபுவும், அதிகார வர்க்க கணங்களில் பெரும்பாலோரும் சூளைக் கொதிப்புக்கு அஞ்சி சிம்ளா மலையுச்சிக்குப் போய் விட்டார்கள்.

சௌந்தர ராகவனும் சீதாவுங் கூடச் சிம்ளாவுக்குப் போவதாக இருந்தது. காமாட்சியம்மாள் தனக்கு மலை வாசம் ஒத்துவராது என்று சொல்லிக் கொண்டிருந்தாள். இந்த சமயத்தில் ஊரிலிருந்து அவளுடைய தமையன் குமாரிக்குக் கலியாணம் என்று கடிதம் வந்தது. ஊருக்குப் போய் ஒரு மாதத்துக்குள் வருவதாகச் சொல்லிவிட்டுக் காமாட்சி அம்மாள் போய் விட்டாள்.

ஆனால் எதிர்பாராத ஏதோ முக்கியமான வேலை வந்து விட்டபடியால் ராகவன் அந்த வருஷம் சிம்ளாவுக்குப் போக முடியவில்லை. "நீ மட்டும் குழந்தையை அழைத்துக்கொண்டு போய் வருகிறாயா? எத்தனையோ ஸ்திரீகள் தனியாகப் போகிறார்கள். பயம் ஒன்றுமில்லை" என்று ராகவன் சொன்னான். "அதெல்லாம் முடியாது! நீங்கள் வராமல் எனக்கு மட்டும் தனியாக மலைவாசம் என்ன வந்தது? போக மாட்டேன்!" என்று சீதா கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

ராகவனும் சீதாவும் மலைவாசம் வேண்டாம் என்று டில்லியில் இருந்து விடத் தயாராயிருந்தாலும், அவர்கள் வீட்டு வேலைக்காரன் அப்படியிருக்கச் சம்மதிக்கவில்லை. அவன் நேபாள தேசத்திலிருந்து வந்தவன். "இந்த உஷ்ணத்தை என்னால் சகிக்க முடியாது!" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தவன், ஒருநாள் திடீரென்று சொல்லிக் கொள்ளாமலே நடையைக் கட்டி விட்டான்.

வீட்டு வேலைக்காரிக்குக் கூட அன்றைக்கு என்னமோ பைத்தியம் பிடித்து விட்டது. "மூன்று நாள் லீவு வேண்டும்" என்று எஜமானியைக் கேட்டாள். "முடியாது" என்று சீதா சொன்னாள். "அப்படியானால் உங்கள் வேலை வேண்டாம்!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள்.

ஆகவே தான் சீதா குழந்தையுடன் அன்று மாலை வீட்டில் தனியாக இருந்தாள். எட்டு மணி வரையில் வஸந்தி "அப்பா எப்ப வருவா?" என்று கேட்டுக் கொண்டிருந்து விட்டுத் தூங்கிப் போய்விட்டாள். குழந்தை தூங்கிய பிறகு சீதா தனிமையை அதிகமாக உணரத் தொடங்கினாள்.

அன்றைக்கு ராகவன் ஆபீசுக்குக் கிளம்பிய போது "இன்றைக்கு எப்படியாவது சூரியா இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அவனை அழைத்துக் கொண்டு வந்து சேருகிறேன்!" என்று சொல்லி விட்டுப் போனான். அதனாலே தான் இன்னும் வரவில்லையோ என்னமோ? சூரியாவைத் தேடிக் கொண்டிருக்கிறாரோ, என்னமோ? சூரியா மட்டும் இன்றைக்கு வரட்டும்; அவனுக்குச் சொல்லிக் கொடுக்கிறேன்! லலிதாவுக்கு என்னவெல்லாம் எழுதியிருக்கிறான்? ரஜனிபூர் ஏரி சம்பவத்தைப் பற்றி இவன் எதற்காக லலிதாவுக்கு எழுத வேண்டும்? அப்படியே இவன் எழுதினாலும் அவள் வேறு தன் அகத்துக்காரரிடம் சொல்லியிருக்கிறாள்! அவர்கள் எல்லாரும் தன் கணவனைப் பற்றி என்ன நினைத்துக் கொள்ளுவார்கள்?...

என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். அந்தப் பட்டிக்



காட்டு ஜன்மங்கள் என்ன நினைத்துக் கொண்டால் இங்கே யாருக்கு என்ன?

இருந்தாலும் லலிதாவுக்கு ஒரு கடிதம் எழுதி வைக்கலாம். பார்க்கப் போனால், அவளைத் தவிர நமக்குத்தான் யார் இருக்கிறார்கள்? தாரிணியின் சிநேகத்தைப் பற்றிப் பிரமாதமாக நினைத்தோமே? டில்லிக்கு வந்த பிறகு அவள் ஒரு தடவையாவது வந்து எட்டிக்கூடப் பார்க்கவில்லை. லலிதாவாயிருந்தால் இப்படி யிருப்பாளா? எப்படியும் பழைய சிநேகிதத்துக்கு இணையாகாது. புது சிநேகிதமெல்லாம் ரயில் சிநேகிதம் மாதிரி தான்.

இந்த முடிவுக்கு வந்த சீதா லலிதாவுக்குப் பதில் எழுதத்தொடங்கினாள்:-

"என் உயிருக்குயிரான தோழி லலிதா! உன்னுடைய விவரமான கடிதம் கிடைத்தது. ரொம்பவும் சந்தோஷம் அடைந்தேன். தேவபட்டணத்தில் நடந்த குப்பைத் தொட்டி எலெக்ஷனைப் பற்றி எழுதியிருந்தது ரொம்ப வேடிக்கையா யிருந்தது. அதனால் உன்னுடைய சிநேகிதியை நீ இழந்து விட்டதையும் கவனித்தேன். உனக்கு நன்றாக வேணும், லலிதா! நான் ஒருத்தி உன் பிராண சிநேகிதி இருக்கும்போது வேறொரு சிநேகிதம் நீ எவ்வாறு செய்து கொள்ளலாம்? ஆகையினால்தான் கடவுள் உன்னை இந்த விதமாகத் தண்டித்திருக்கிறார்.

ஆனால் நானும் இங்கே சில புதிய சிநேகிதங்கள் செய்து கொண்டிருக்கிறேன் என்பதை உனக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். ரஜனிபுரத்துத் திவான் குமாரிகளைப் பற்றி முன்



கடிதத்தில் எழுதி யிருக்கிறேன் அல்லவா? அவர்கள் மூன்று வாரத்துக்கு முன்னால் இங்கே வந்திருந்தார்கள். எங்கள் வீட்டுக்கும் வந்தார்கள். எல்லாருமாக வைஸராய் அரண்மனையில் நடந்த 'கார்டன் பார்ட்டி'க்குப் போயிருந்தோம். அம்மம்மா! அதைப்பற்றி நான் என்னவென்று சொல்லுவது? அரபிக் கதைகளில் நாம் படித்திருக்கும் அற்புதக் காட்சிகளையும் சினிமாக்களில் பார்த்திருக்கும் அதிசயக் காட்சிகளையும் மிஞ்சி விட்டது. வைஸராய் தோட்டத்தின் அழகைச் சொல்வேனா? அங்கேயிருந்த புஷ்பச் செடிகளையும் அலங்கார விருட்சங்களையும் வர்ணிப்பேனா? மரங்களுக்குள்ளேயும் செடிகளுக்குள்ளேயும் மறைத்துக் கண்கூசாதபடி விளக்குப் போட்டிருந்த அதிசயத்தைச் சொல்வேனா? அங்கே வந்திருந்த சீமான்களையும் சீமாட்டிகளையும் அவர்களுடைய அலங்கார உடைகளையும் ஆபரணங்களையும் வர்ணிப்பேனா? லலிதா! வெள்ளைக்கார ஸ்திரீகள் பளபளவென்று ஜொலித்த கருப்பு உடைகளை அணிந்து வந்திருந்தார்கள். நம்முடைய நாட்டு ஸ்திரீகள் பலர் நம்முடைய நாட்டு வழக்கப்படி பல வர்ணச் சேலைகளை உடுத்திக்கொண்டு வந்திருந்தார்கள். ஒவ்வொரு புடவையும் ஒவ்வொரு மோஸ்தர். அவர்கள் அணிந்து கொண்டிருந்த ஆபரணங்களும் அப்படியே. எல்லாம் ஒரே ஜொலிப்புத்தான். எனக்குத் திக்பிரமையா யிருந்தது. ஆனால் திவானுடைய பெண்கள் பாமாவும் தாமாவும் இந்த மாதிரி 'பார்ட்டி'களுக்குப் பல தடவை போய்ப் பழக்கப்பட்டவர்களாதலால் அவர்களுக்குச் சகஜமாயிருந்தது. அங்கே வந்திருந்தவர்களில் அநேகம் பேரை அவர்களுக்குத் தெரிந்திருந்தது. என்னைப் பலருக்கு அறிமுகப் படுத்தி வைத்தார்கள். வெள்ளைக்காரர்களுக்கு நம்மைப் புதிதாக அறிமுகப் படுத்தியதும் அவர்கள் உடனே 'ஹவ் டு யூ டூ!' என்று கேட்கும் அழகு ஒன்றே போதும்! லலிதா! வெள்ளைக்காரர்களைப் பற்றி அவர்கள் அப்படி, இப்படி என்று ஓயாமல் தூஷித்துக் கொண்டிருப்பதினால் என்ன பிரயோசனம்? அவர்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. முக்கியமாக, ஒருவருக்கொருவர் மரியாதையாக எப்படி நடந்து கொள்வது என்பதை வெள்ளைக்காரர்களிட மிருந்துதான் நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

தேவபட்டணம் தேர்தலைப் பற்றி நீ எழுதியிருந்தாயே? இங்கிலீஷ்காரர்களின் தேசத்திலுந்தான் தேர்தல் நடக்கிறது. தேர்தல் முடிந்து விட்டால், ஜயித்தவர்களைத் தோற்றவர்கள்தான் முதன் முதலில் பாராட்டுவார்களாம்! நம்முடைய ஊரில் தேர்தலில் எதிர்க் கட்சியில் இருந்து விட்டால் அப்புறம் ஜன்ம சத்துருக்களைப் போல் நடந்து கொள்கிறார்கள். என்ன மூடத்தனம்!

நவநாகரிகத்தின் அலங்காரங்களைப் பற்றிக் குறை சொல்லி உனக்கு

முன்னே எழுதியிருந்தேன் அல்லவா? அந்த விஷயத்திலே கூட என்னுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டிருக்கிறேன். வைஸ்ராய் மாளிகையில் நடந்த பார்ட்டியில் பார்த்த போது தான், 'லிப்-ஸ்டிக்' போட்டுக் கொள்வதில் ஒரு அழகு இருக்கிறது என்று எனக்குத் தெரிந்தது. இவர் கூட அடிக்கடி 'ரோமாபுரியில் இருக்கும் போது ரோமர்கள் செய்வது போலச் செய்ய வேண்டும்' என்ற இங்கிலீஷ் பழமொழியை எடுத்துச் சொல்வார். நானும் புதுடில்லியில் இருக்கும் போது புது டில்லிக்காரர்களைப் போலத்தான் நடந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். நம்முடைய பட்டிக்காட்டு வழக்கந்தான் சரியான வழக்கம் என்று சொல்லிக் கொண்டிருந்தால் யார் கேட்பார்கள்? நீ தான் சொல்லேன்! நம்முடைய பாட்டிகள் முகத்தில் ஒரு வீசை மஞ்சளை அரைத்துப் பூசிக் கொண்டிருந்தார்கள். அப்படிச் செய்து கொள்ள நமக்கு இப்போது பிடிக்கிறதா?...

சூரியா உனக்கு என்ன வெல்லாமோ எழுதியிருக்கிறான் என்று தோன்றுகிறது. அதையெல்லாம் நீ நம்ப வேண்டாம். சூரியா இங்கே வந்தால் அவனைச் சண்டை பிடிக்கலாம் என்று இருக்கிறேன். அவன் பார்க்காத விஷயத்தைப் பற்றி யாரோ சொன்னதை வைத்துக் கொண்டு எதற்காக எழுதுகிறான்? அவனுக்கு யார் சொல்லியிருக்கக்கூடும் என்றும் தெரியவில்லை. ஒரு வேளை, தாரிணி என்கிறவளைப் பற்றி எழுதியிருந்தேனே, அவள்தான் ஏதாவது சொன்னாளோ, என்னமோ? அப்புறம் யோசித்துப் பார்க்கப் பார்க்க, அவள் பேரில் எனக்குச் சந்தேகம் உதிக்கிறது. அவள் விஷயம் எல்லாமே மர்மமாயிருக்கிறது. டில்லிக்கு வந்த பிறகு ஒரு தடவை கூட அவள் என்னை வந்து பார்க்கவில்லை. அதற்குப் பதிலாகச் சூரியாவைப் பார்த்துப் பொய்யும் புளுகும் சொல்லி வைத்திருக்கிறாள்.

நான் ஏரித் தண்ணீரில் விழுந்து முழுகும் போது என் அகத்துக்காரர் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாரா? அது சுத்தப் பொய்! அந்த ஏரியில் எங்கேயும் கழுத்துக்கு மேலே ஆழம் இல்லை என்று படகுக்காரன் சொன்னானாம். அதனாலே தான் இவர் கவலையின்றிப் படகிலிருந்தபடியே என்னை எடுத்துவிடலாம் என்று இருந்தார். அதற்குள்ளே அந்தத் தாரிணி என்கிறவள் தனக்கு நீந்தத் தெரிகிற பெருமையைக் காட்டுவதற்காகத் தண்ணீரில் குதித்து விட்டாள். என்ன இருந்தாலும் புருஷர்கள் செய்ய வேண்டிய காரியத்தை ஸ்திரீகள் செய்தால் அவ்வளவு நன்றாயில்லை தான்? இந்த மாதிரி முந்திரிக் கொட்டை ஜன்மங்களும் உலகத்தில் இருக்கின்றன. என்ன செய்யலாம்?

நான் ஜலத்தில் மூழ்கி மூர்ச்சை போய்விட்டேன் என்பது உண்மைதான். ஆனால் அதற்குக் காரணம் அலை பாதி; பயம் பாதி. அலை மோதித் தலைக்குமேலே போனபோது முழுகிப் போய்விட்டதாகவே எண்ணிக் கொண்டு விட்டேன். லலிதா! இப்போதெல்லாம் எனக்கு அடிக்கடி பயமாயிருக்கிறதடி! காரணமில்லாமலே திடீர் திடீர் என்று பயம் உண்டாகிறது. ஏதாவது வியாதிதானோ என்னமோ தெரியவில்லை. ராஜம்பேட்டைப் பட்டிக்காட்டிலே யென்றால், 'சங்கா தோஷம்' என்றும், 'பேய் பிசாசு' என்றும் ஏதாவது கட்டிவிடுவார்கள். பாட்டிமார்கள் 'பில்லி சூனியம்' என்றும், 'ஏவல் வினை' என்றும் கதை கட்டிவிடுவார்கள். அதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஆகையினால் தான் ஏதாவது வியாதியாயிருக்குமோ என்று பயப்படுகிறேன்......

இப்போதுகூடப் பார்! திடீரென்று என் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்கிறது! கை நடுங்குகிறது!... ஜன்னலுக்கு வெளியே செடிகளின் சலசலப்புச் சத்தம் கேட்டால் எதற்காக நான் பயப்படவேண்டும்?...... வீட்டில் ஒருவரும் இல்லாவிட்டால் தான் என்ன? அடுத்த பங்களாவில் ஜனங்கள் இருக்கிறார்கள். ஒரு கூப்பாடு போட்டால் உடனே வந்து விடுவார்கள்......அப்படியிருக்க, என்னுடைய பயத்துக்குக் கொஞ்சங்கூடக் காரணமே யில்லை!......

இந்த இடத்தில் சீதா கடிதத்தை நிறுத்தினாள். பயத்துக்குக் காரணமே இல்லை என்பது உண்மைதானா? லலி

லேசாகும் காற்று அடிக்கவில்லையே? காற்றே இல்லாத போது செடிகள் எப்படிச் சலசலக்கும்?

ஜன்னல் வழியாகப் பார்க்கக் கூடாது என்ற மனத்தின் உறுதியை மீறி அவளுடைய கண்கள் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தன. பார்த்த நேரம் ஒரு விநாடிதான். உடனே கண்கள் இந்தப் பக்கம் திரும்பின. வெளியே பார்த்த அந்த ஒரு விநாடி நேரத்தில் செடிகளின் மறைவில் ஒரு முக்காடு அணிந்த உருவம் போவது போலக் காணப்பட்டது. அது வெறும் பிரமையா? அல்லது உண்மையா?

பிரமையோ, உண்மையோ, சீதாவின் நாக்கு பயத்தினால் தொண்டைக்குள்ளே போய்விட்டது போலத் தோன்றியது. கூச்சல்போட விரும்பினாள். ஆனால் சத்தம் வெளியில் வரவில்லை. கால்களும் கைகளும் நடுங்கின. பற்கள் ஒரு நிமிஷம் கிட்டிப் போயிருந்தன. அடுத்த நிமிஷம் கடகடவென்று அடித்துக்கொண்டன.

பயப் பிராந்தி நீங்கிப் பழைய நிலையை அடைவதற்கு ஐந்து நிமிஷம் ஆயிற்று. சீ! இதென்ன பைத்தியக்காரத்தனம்! இது என்ன வீண் பயம்?—இவ்விதம் எண்ணி லலிதாவுக்கு எழுதிய கடிதத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு மறுபடியும் எழுத முயன்றாள். ஆனால் என்ன எழுதுவதென்று தோன்றவில்லை. விஷயம் ஒன்றும் மனதிற்கு வரவில்லை. அதற்குப் பதிலாக "வாசற் கதவையும் கொல்லைக் கதவையும் தாளிட்டோமா?" என்ற எண்ணம் தோன்றியது. வேலைக்காரி கோபித்துக்கொண்டு போனவள் ஒரு வேளை பங்களாவின் கொல்லைக் கதவைக் கூடத் தான் போட்டிருக்க மாட்டாள். ஆனால் ஒருநாளும் இல்லாத பயம் இன்றைக்கு மட்டும் என்ன வந்தது? வாசற் கதவும் கொல்லைக் கதவும் தான் போடாவிட்டால் என்ன? யார் வந்து என்ன செய்துவிடுவார்கள்? பயம் ஒன்றுமில்லாவிட்டாலும் வாசற் கதவையும் கொல்லைக் கதவையும் தாளிட்டு வைப்பதே நல்லது. அதனால் கெடுதல் ஒன்றும் இல்லையல்லவா?......

இவ்வாறு முடிவு செய்து சீதா தைரியமாக எழுந்து சென்று வாசற் பக்கம் வந்தாள். சந்தடியே யில்லாதிருந்த சாலையின் இருபுறமும் உற்றுப் பார்த்தாள். கார் ஒன்றும் வரக் காணோம். கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள். கொல்லைக் கதவையும் பார்த்து, ஒருவேளை திறந்திருந்தால் தாளிட்டுவிட வேண்டியதுதான். இப்படி நினைத்துக் கொல்லைப் பக்கம் அடி எடுத்து வைத்தபோது......ஆ! அது என்ன சத்தம்? துப்பாக்கிச் சத்தம் இல்லை; இடி யிடிக்கும் சத்தம் இல்லை; புலி உறுமும் சத்தம் இல்லை; பாம்பு சீறும் சத்தமும் இல்லை. குழாயிலிருந்து ஜலம் விழும் சர்வ சாதாரணமான சத்தந்தான்! அந்த சத்தம் ஸ்நான அறையிலிருந்து வந்து கொண்டிருந்தது! மறுபடியும் சீதாவின் நாக்கு அவளுடைய தொண்டைக்குள்ளே மடங்கிச் சென்று அடைத்துக் கொண்டது. அவளுடைய கால்கள் மேலே ஒரு அடியும் எடுத்துவைக்க முடியாமல் நின்ற இடத்திலேயே வேரூன்றி நின்றன. தனக்குத் தெரியாமல் வீட்டுக்குள் யாரோ புகுந்து ஸ்நான அறைக்குள் சென்றிருக்க வேண்டும்; தண்ணீர்க் குழாயைத் திறந்து விட்டிருக்க வேண்டும். அது யார்?



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்




## 49. அஹமத்தின் சபதம்

கறுப்புச் சட்டத்தை எதிர்த்து நிற்பது என்று தீர்மானித்த பிறகு முதலில் சமாதான வழிகள் எல்லாவற்றையும் கையாண்டு பார்த்துவிடுவது என்று காந்திஜி தீர்மானித்தார். எனவே, இன்னும் சில இந்தியர்களையும் சேர்த்துக்கொண்டு சர்க்கார் காரியதரிசியான மிஸ்டர் டன்கன் என்பவரைப் போய்ப் பார்த்தார். இந்திய சமூகம் செய்திருக்கும் தீர்மானத்தைப் பற்றி எடுத்துச் சொன்னார். மிஸ்டர் டன்கன் கூறிய பதிலாவது:—"ஸ்திரீகளைப் பொறுத்த வரையில் சட்டத்தில் விலக்கு அளித்து விடுவது என்று சர்க்கார் முடிவு செய்திருக்கிறார்கள். மற்றப்படி சட்டத்தை நிறைவேற்றிக் கண்டிப்பாக அமுல் நடத்த வேண்டுமென்று முடிவாகத் தீர்மானித்து விட்டார்கள். இதைப் பற்றி நீங்கள் வீண் கிளர்ச்சி செய்வதில் யாதொரு பயனும் இல்லை. ஜெனரல் போதாவும் ஜெனரல் ஸ்மட்ஸும் நீங்கள் இந்தச் சட்டத்துக்கு உட்பட வேண்டும் என்று விரும்புகிறார்கள். உட்பட்டால், சில்லறை விஷயங்களில் உங்களுடைய யோசனைகள் கவனிக்கப்படும். ஆனால் சட்டம் அமுலுக்கு வந்தே தீரும்."

இந்த பதிலைத் தெரிந்துகொண்ட இந்திய சமூகத்துக்கு ஒரு விதத்தில் உற்சாகம் அதிகமாயிற்று. ஸ்திரீகள் விஷயத்தில் சர்க்கார் விலக்குச் செய்ய ஒப்புக்கொண்டது தங்களுடைய சாத்வீக எதிர்ப்பு இயக்கத்தின் பலனே என்று கருதினார்கள். ஆயினும் சட்டம் முழுவதையும் எதிர்த்தே தீருவதென்று உறுதி கொண்டார்கள். ஸ்திரீகளின் விஷயத்தில் விலக்குச் செய்ய முன்வந்ததற்காகச் சர்க்கார் காரியதரிசிக்கு நன்றி தெரிவித்துவிட்டு, எனினும் கறுப்புச் சட்டத்துக்குத் தாங்கள் உட்பட முடியாது என்று சொல்லிவிட்டுத் திரும்பினார்கள்.

சமாதான முறைகள் இத்துடன் தீர்ந்து போய்விடவில்லை. இங்கிலாந்துக்குச் சென்று பிரிட்டிஷ் சர்க்காரைப் பேட்டி காண்பதினால் ஏதேனும் பயன் விளையலாம். எனவே, இங்கிலாந்துக்குத் தூதுகோஷ்டி அனுப்புவதென்று தீர்மானமாயிற்று. அதற்கு வேண்டிய செலவுக்கு உடனே பணம் திரட்டியாகிவிட்டது. ஆனால் பிரதிநிதிக் கூட்டத்தில் யார் போவது என்பதில் சிறிது தகராறு நேர்ந்தது. காந்திஜி போக வேண்டும் என்பது எல்லாருக்கும் சம்மதம். அவரைத் தவிர இன்னும் பலர் போக எண்ணினார்கள். ஆனால் காந்திஜி அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார். அதிகப் பேர் போவதினால் காரியம் ஒன்றும் ஆகாது என்று எடுத்துக் காட்டினார். கடைசியில் காந்திஜியையும் ஜனாப் எச். ஓ. அலி என்னும் முஸ்லிமையும் மட்டும் அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது.

மகாத்மாவும் ஜனாப் அலியும் இங்கிலாந்துக்குச் சென்றார்கள். போகும்போதே கப்பலில் குடியேற்ற நாட்டு மந்திரி லார்ட் எல்ஜினிடம் சமர்ப்பிக்க ஒரு விண்ணப்பத்தைத் தயாரித்துக் கொண்டார்கள். இங்கிலாந்து சென்றதும் இந்தியா மந்திரி மார்லியைப் பேட்டி கண்டு பேசினார்கள். இந்திய

காங்கிரஸ் மகாசபைக்கு அப்போது லண்டனில் கிளைக் கமிட்டி ஒன்று இருந்தது. ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி மூலம் மேற்படி கமிட்டி அங்கத்தினரைப் பார்த்துப் பேசினார்கள். பிறகு பார்லிமெண்ட் அங்கத்தினர் பலரையும் சந்தித்துப் பேசினார்கள். இங்கிலாந்தில் எந்த ஒரு முக்கியமான பொது விஷயத்தையும் ஏதேனும் ஒரு விருந்து வைத்துத்தான் ஆரம்பிப்பது என்ற சம்பிரதாயம் உண்டு. அதுபோலவே இவர்களும் ஒரு விருந்து நடத்தி அதற்குப் பிரமுகர்கள் பலரையும் அழைத்தார்கள். இந்த விருந்தின் போது தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் கட்சியைக் கவனித்துக் கொள்வதற்காக ஆங்கிலேயரும் இந்தியரும் அடங்கிய ஒரு கமிட்டி ஏற்படுத்தப் பட்டது.

குடியேற்ற நாட்டு மந்திரி லார்ட் எல்ஜினைப் பேட்டி கண்டு விஷயத்தைச் சொன்னபோது அவர் எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டார். தம்முடைய அநுதாபத்தையும் தெரிவித்தார். தம்மால் முடிந்ததையெல்லாம் செய்வதாகவும் சொன்னார்.

கூடியவரையில் திருப்திகரமாகத் தோன்றிய இந்த பதிலைப் பெற்றுக்கொண்டு காந்திஜியும் ஜனப் அலியும் தென்னாப்பிரிக்கா திரும்பினார்கள். திரும்பும் வழியில் மதீரா என்னும் துறைமுகத்தில் கப்பல் நின்றபோது அவர்களுக்கு ஒரு தந்தி வந்தது. இங்கிலாந்தில் இருந்த சமயம் அவர்களுக்குக் காரியதரிசியாக வேலை பார்த்த மிஸ்டர் ரிட்ச் என்பவர் தந்தி கொடுத்திருந்தார். "டிரான்ஸ்வால் சர்க்காரின் ஆசிய மசோதாவுக்கு அரசரின் அநுமதி கிடைக்காது. அதைச் சிபார்சு செய்ய லார்ட் எல்ஜின் மறுத்து விட்டார்!" என்று அந்தத் தந்தியில் கண்டிருந்தது. காந்திஜி அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. இங்கிலாந்துக்குத் தூது போன நோக்கம் பூரண வெற்றியடைந்து விட்டது! இனிமேல் சத்தியாக்கிரகப் போராட்டம் ஆரம்பித்து நடத்தவேண்டிய அவசியமேயில்லை. — இவ்விதம் எண்ணிக் குதூகலம் அடைந்தார் மகாத்மா. மதீராவிலிருந்து கேப்டவுன் துறைமுகத்துக்கு அந்தக் காலத்தில் பதினைந்து நாள் பிரயாணம். இந்தப் பதினைந்து தினங்களும் பற்பல ஆகாசக் கோட்டைகள் கட்டிக் கொண்டு யாத்திரை செய்தார். ஆனால் கேப்டவுனில் இறங்கியதும் தெரிந்த சமாசாரம் ஆகாசக் கோட்டைகளைத் தகர்த்து எறிந்து விட்டன. லார்ட் எல்ஜின் "ஆசியாச் சட்டத்துக்கு அநுமதியில்லை" என்று சொன்னதில் ஒரு வஞ்சக தந்திரம் இருந்தது என்று வெளியாயிற்று. அதன் விவரம் என்னவென்றால் :—

போயர் யுத்தத்துக்குப் பிறகு மிஸ்டர் சேம்பர்லின் டிரான்ஸ்வாலுக்கு வந்து போயர்களைச் சமரசப்படுத்தப் பெருமுயற்சி செய்தார். டிரான்ஸ்வாலுக்குப் பூரண சுயாட்சி கொடுத்து விடுவதாக அவர்களுக்கு வாக்களித்திருந்தார். இது பிரிட்டிஷ் பொது மக்களின் விருப்பத்துக்கு ஒத்திருந்தது. பார்க்கப் போனால், போயர்களும் வெள்ளை நிறத்தவர்கள்தான்; ஐரோப்பியர்கள்தான். ஏகாதிபத்தியத்துக்குள் அவர்களை விரோதிகளாக வைத்துக்கொண்டிருக்க பிரிட்டிஷார் விரும்பவில்லை.

எனினும், டிரான்ஸ்வாலுக்குப் பூரண சுயாட்சி கொடுப்பது சம்பந்தமான சட்டங்களும் சம்பிரதாயங்களும் இன்னும் பூர்த்தியாகி விடவில்லை. 1906-ம் வருஷத்தில் கூட டிரான்ஸ்வால் மாகாணம் பிரிட்டிஷ் 'கிரௌன் காலனி' யாகவே இருந்தது. அதாவது அந்த நாட்டின் ஆட்சிக்கு பிரிட்டிஷ் அரசர் நேரில் பொறுப்பு வகிப்பதாக ஐதீகம். காரியாம்சத்தில், பிரிட்டிஷ் மந்திரி சபை பொறுப்பு வகித்து வந்தது.

பூரண சுயாட்சி டிரான்ஸ்வாலில் 1907-ம் வருஷம் ஜனவரி 1உ அமுலுக்கு வருவதாக இருந்தது. ஆகவே, லார்ட் எல்ஜின் லண்டனில் இருந்த டிரான்ஸ்வால் ஏஜண்டிடம் என்ன சொன்னார் என்றால், "தற்சமயம் பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவையும் ஆளுகிறார்கள்; டிரான்ஸ்வாலையும் ஆளுகிறார்கள். ஆகையால் இந்திய நாட்டின் பிரஜைகளுக்கு டிரான்ஸ்வாலில் தடைகளை ஏற்படுத்துவதை அநுமதிக்க முடியாது. சீக்கிரத்தில் உங்களுக்கு (அதாவது டிரான்ஸ்வாலுக்கு)ப் பூரண சுயாட்சி வரப்போகிறது. இப்போது இந்த மசோதாவைக் கைவிட்டு விட்டுச் சுயாட்சி வந்ததும் அப்புறம் புதிதாகக் கொண்டுவந்து நிறைவேற்றுங்கள். சுயாட்சி பெற்ற


தாதாபாய் நௌரோஜி

*****************************

## மது விலக்கு

1939-ம் ஆண்டில் உலக மகா யுத்தம் ஆரம்பித்தவுடன் நமது காங்கிரஸ் மந்திரி சபைகள் யாவும் ராஜீநாமாச் செய்தது எல்லாருக்கும் தெரியும். அகில இந்தியாவிலேயே முதல் ஸ்தானம் பெற்ற நமது சென்னை மந்திரி சபையின் பிரதமர் ராஜாஜி நமது ஆட்சிக் காலத்தில் மதுவிலக்கைச் சில ஜில்லாக்களில் அமுலுக்குக் கொண்டு வந்தார். அவர் ராஜீநாமாச் செய்ய நேர்ந்த பொழுது ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில், மக்களைக் கேட்டுக் கொண்டதாவது:—

"ஒரு பெண்ணின் தந்தை தம் பெண்ணைப் புக்ககத்தில் கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்புகையில், சம்பந்திகளிடம் தம் பெண் ஏதாவது குற்றம் குறைகள் செய்தாலும் அவற்றைப் பொருட் படுத்தாது. பெண்ணை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறார். சம்பந்திகளும் அவ்வாறே நடந்து கொள்வதாக வாக்குக் கொடுக்கின்றனர். இருந்தபோதிலும் பெண்ணின் தந்தை கவலையுடனேயேதான் திரும்புகிறார். அதேபோல் காங்கிரஸ் சர்க்கார் மதுவிலக்கு என்ற தம் பெண்ணைப் பிரிட்டிஷாரிடம் ஒப்படைத்திருக்கின்றனர். பிரிட்டிஷ் சர்க்கார் மதுவிலக்கைப் பற்றி எவ்வளவு வாக்குறுதி கொடுத்தாலும் காங்கிரஸுக்குத் தம் பெண்ணைப் பற்றிய கவலை இருக்கத்தானே செய்யும்? இந்த நிலையில், பொது மக்களாகிய நீங்கள் தான் இந்தப் பெண்ணின் கணவன் ஆவீர். உங்கள் தந்தையாகிய சர்க்கார் பெண்ணைக் கஷ்டத்திற்கு உள்ளாக்கினால் கணவனாகிய நீங்கள் தான் உங்கள் மனைவியைப் பார்த்துக் கொள்ளவேண்டும்"

இப்பொழுதோ பெண், கணவன், பெண்ணின் பெற்றோர் எல்லோரும் ஒரே குடும்பத்திலிருக்கிறோம். ஆகையால் கணவனாகிய நாம் தந்தையான சர்க்காருடன் ஒத்துழைத்தால்தான் மதுவிலக்கு வெற்றிபெறும்; அதன் வெற்றியைக் கண்டு காந்தி மகாத்மாவின் ஆத்மாவும் இன்புறும் என்று சொல்லவும் வேண்டுமா?

*****************************

காடுகளின் சட்டங்களில் பிரிட்டிஷ் மந்திரி சபை குறுக்கிட உரிமையில்லை. எந்தச் சட்டத்தை நிறைவேற்றினாலும் அரசரின் அநுமதி கிடைத்துவிடும். இப்போது எதற்காக வீண்தொல்லை?"

இந்த யோசனைக்கு டிரான்ஸ்வால் ஏஜெண்டு சம்மதித்து டிரான்ஸ்வால் சர்க்காருக்குத் தெரிவித்து விட்டார். அவர்களும் ஒப்புக்கொண்டார்கள். இந்த விவாமெல்லாம் மிஸ்டர் ரிட்சுக்குத் தெரியாது. "சட்டத்துக்குக் கையெழுத்து ஆகவில்லை" என்பதை மட்டும் அவர் அறிந்து காந்திஜிக்குத் தந்தி கொடுத்து விட்டார்.

லார்ட் எல்ஜின் செய்தது நேர்மையான காரியம் அல்லவென்று காந்திஜி அபிப்பிராயப்பட்டார். ஒரு அற்ப தந்திரத்தைக் கையாண்டு இந்திய சமூகத்தை ஏமாற்றி விட்டதாகவே கருதினர். டிரான்ஸ்வால் சுயாட்சி பெற்றுவிட்டால் மட்டும் என்ன? பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு அது உள்ளடங்கி இருக்கும் வரையில் இந்தியர்களுடைய உரிமைகளை வற்புறுத்திப் பாதுகாப்பது பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சர்க்காரின் கடமை யல்லவா?

காந்திஜியைப் போலவே இந்திய சமூகமும் கொதிப்படைந்தது. யாருடைய உதவியையும் எதிர்பாராமல் போராட்டத்துக்குத் தயார் செய்யத் தொடங்கினார்கள்.

குறிப்பிட்ட தேதியில் அதாவது 1907 ஜனவரி 1உ டிரான்ஸ்வாலில் சுயாட்சி அமுலுக்கு வந்தது. மார்ச்சு மாதம் 21உ பழைய கறுப்புச் சட்டத்தைப் புதிய உருவத்தில் கொண்டுவந்து புதிய பார்லிமெண்டில் நிறைவேற்றினார்கள். ஜூலை 1உ யிலிருந்து சட்டம் அமுலுக்கு வரும் என்றும், ஜூலை 31உக்குள் எல்லா இந்தியர்களும் பதிவு விண்ணப்பம் போட்டுவிட வேண்டும் என்றும் உத்தரவு பிறந்தது. இதற்காகப் பாரங்கள் அச்சிடப் பட்டன. ஆபீஸ்களும் திறக்கப்பட்டன.

அதேசமயத்தில் காந்திஜியின் தலைமையில் டிரான்ஸ்வால் இந்தியர்களும் சத்தியாக்கிரகப் போராட்டத்துக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே பொதுக்கூட்டங்கள் நடந்தன. சாத்வீக எதிர்ப்புச் சபதத்தில் மீண்டும் ஒரு முறை கையெழுத்து வாங்கப் பட்டது. "முன்னே சபதம் எடுத்துக் கொண்ட போது அமுலுக்கு வரவிருந்த சட்டந்தான் ரத்தாகி விட்டதே! இது புதிய சட்டந்தானே? அந்தச் சபதம் இதற்குக் கட்டுப் படுத்தாது!" என்ற யுக்திவாதத்தைச் சொல்லி ஒரு சில இந்தியர்கள் நழுவிக் கொள்ளப் பார்த்தார்கள். ஆகவே இரண்டாவது தடவையும் சபதத்தில் கையெழுத்து வாங்குவது அவசியமாயிற்று.

பதிவு செய்வதற்குக் கடைசித் தவணைத் தேதி நெருங்கி வந்து கொண்டிருந்த சமயத்தில் மற்றொரு பெரிய பொதுக் கூட்டம் கூட்டினார்கள். பிரிட்டோரியாவில் உள்ள மசூதியைச் சேர்ந்த திறந்த வெளியில் கூட்டம் நடந்தது. அதற்கு ஜனாப் யூசப் இஸ்மேல் மியான் தலைமை வகித்தார்.

தேதி நெருங்க நெருங்க இந்தியர்களுடைய கவலை அதிகமானதுபோல் டிரான்ஸ்வால் சர்க்காருடைய கவலையும் அதிகமாகி வந்தது. எனவே ஜெனரல் போதா மேற்படி கூட்டத்துக்குத் தம்முடைய தூத

ராக மிஸ்டர் வில்லியம் ஹாஸ்கென் என்பவரை அனுப்பி வைத்தார். மிஸ்டர் ஹாஸ்கென் கூட்டத்தில் பேசினார். "நான் உங்களுடைய நண்பன். உங்களுடைய நன்மைக்காகவே சொல்கிறேன். டிரான்ஸ்வால் ஐரோப்பியர்கள் பொதுவாக உங்கள் விஷயத்தில் விரோத பாவங் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய விருப்பத்தை டிரான்ஸ்வால் சர்க்கார் புறக்கணிக்க முடியாது. ஆகையால் இந்தச் சட்டத்தை நடத்தியே தீருவதென்று சர்க்கார் உறுதி கொண்டு விட்டார்கள். நீங்கள் இச்சட்டத்தை எதிர்ப்பது வீண். சுவரில் முட்டிக் கொள்வது போலாகும். ஏதாவது சில்லறை விஷயங்களில் திருத்தம் வேண்டினால் ஜெனரல் ஸ்மட்ஸ் கவனிப்பார். ஆனால் சட்டத்தை மாற்ற முடியாது. சட்டத்தை ஒழிக்கும் வீண் முயற்சியில் இறங்கி உங்களை நீங்களே அழித்துக் கொள்ள வேண்டாம்!"

மிஸ்டர் ஹாஸ்கென் இவ்விதம் பேசிய பிறகு இந்தியர்கள் சிலர் பேசினார்கள். அவர்களில் ஜனாப் அஹமத் முகம்மத் கச்சாலியா ஒருவர். கச்சாலியா சேத் சுருக்கமாகவே பேசினார். அதன் கருத்து வருமாறு:— "ஹாஸ்கென் கூறியதை யெல்லாம் கவனமாகக் கேட்டேன். அதனால் என்னுடைய உறுதி வலுப்பெற்றிருக்கிறது. டிரான்ஸ்வால் சர்க்கார் எவ்வளவு பலமுள்ளவர்கள் என்பதை நாம் அறிவோம். நம்மைச் சிறையில் அடைப்பார்கள்; நம்முடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்வார்கள்; நாட்டை விட்டு வெளியேற்றுவார்கள்; தூக்கிலேயும் போடுவார்கள்! இவ்வளவையும் நாம் சகித்துக் கொள்வோமே தவிர இந்தச் சட்டத்துக்குப் பணிய மாட்டோம். ஆண்டவன் ஆணையாகச் சொல்கிறேன். என்னைத் தூக்கிலே போட்டாலும் சரி, நான் இந்தச் சட்டத்துக்கு உட்படேன்."

கச்சாலியா சேத் கடைசி வாக்கியத்தைச் சொன்ன போது அவருடைய கை விரல்களினால் கழுத்தைத் தொட்டுக் காட்டினார். கூட்டத்திலிருந்த சிலர் இதைப் பார்த்துப் புன்னகை புரிந்தார்கள். 'தூக்கிலே போட்டாலும் பணியமாட்டேன்' என்று அவர் சொல்வது வெறும் வீரப்புப் பேச்சு என்று அவர்கள் கருதினார்கள். ஆனால் அவர்களுடைய சந்தேகந்தான் பிசகானது என்பதைக் கச்சாலியா சாகிப் பிற்காலத்தில் நிரூபித்தார். போராட்டத்தில் அவர் அடைந்த கஷ்ட நஷ்டங்களைச் சொல்லி முடியாது. ஆயினும் அவர் இறுதிவரையில் ஒரே உறுதியாக இருந்து வந்தார்.

தம்பி! கச்சாலியா சேத்தின் தியாகத்தையும் தீரத்தையும் குறித்துக் காந்தி மகான் "தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகம்" என்னும் நூலில் ஒரு முழு அத்தியாயம் எழுதியிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் காந்திஜியின் இயக்கத்துக்குத் துணை நின்ற பிரமுகர்கள் பலர் முஸ்லிம்கள் என்பதை நீ இதற்குள் கவனித்திருப்பாய் என்று நம்புகிறேன். ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையில் காந்திஜி கடைசி வரையில் சலியாத நம்பிக்கை கொண்டிருந்தது என் என்பதையும் நாம் ஊகிக்கலா மல்லவா?

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 227. வீரத்தைக் காக்கச் சொல்!

**சீ**தைக்கு நேரக் கூடிய ஆபத்தை உணர்ந்த மாத்திரத்தில் அனுமனது அன்பும் ஆத்திரமும் சேர்ந்து அவனைத் துரிதப்படுத்துகின்றன.

“வேறே நான் என்ன சொல்ல இருக்கிறது, ஒன்றுமில்லை! ராமனிடத்தில் உன்னைக் கொண்டு போய்ச் சேர்க்கும்படி விதியே எனக்கு உதவி செய்கிறது! நீ அதற்கு அருள் செய்ய வேண்டும்.”

**“வேறி னிவி ளம்ப வுள (து)**
**இன்று; விதி யால் இப்**
**பேறு பெறும் என்கண் அருள்**
**தந்த ருளு, பின் போய்**
**ஆறு துயர், அம்சொல் இள**
**வஞ்சி! அடி யன் தோள்**
**ஏறு கடி (து)” என்று தொழு (து),**
**இன்ன டிப ணிந் தான்.**

[வேறினி விளம்ப உளது இன்று: வேறு சொல்லுவதற்கு ஒன்றுமில்லை; விதியால் இப்பேறு பெறும் என்கண்: நல்ல விதியின் உதவியால் உன்னை ராமனிடம் சேர்க்கும் பாக்கியத்தைப் பெற இருக்கும் என்னிடம்; அருள் தந்தருளு: கிருபை செய்து அருள வேண்டும்; பின் போய் ஆறுதுயர்: இங்குள்ள கஷ்டத்தை யெல்லாம் ராமனிடம் போன பின்பு தீர்த்துக் கொள்ளலாமே; அஞ்சொல் இள வஞ்சி: இனிய சொல் வழங்கும் மென்மையான பூங்கொடியே; அடியன் தோள் ஏறு கடிது என்று: எளியேனுடைய தோள்மேல் உடனேயே ஏறி அருள வேண்டும் என்று சொல்லி; தொழுது இன்னடி பணிந்தான்: இரண்டு கைகளையும் கூப்பினவனாய்ச் சீதையின் அழகிய காலில் விழுந்தான்.]

* * *

‘**அ**ரக்கர்களிடை சீதை இருக்கிறாளே, பேராபத்துக்கெல்லாம் உள்ளாவாளே, உயிருக்கே ஆபத்து வந்து விடுமே!’ என்றெல்லாம் பயப்படுகிறான் அனுமன். ஆனால் சீதைக்கு அந்த பயம் ஒன்றுமில்லை. அவளுக்குத் தான் இருக்கும் இடம் ராமனுக்குத் தெரியாதே, தன்னை எப்படி மீட்க முடியும்? ராவணனோ மற்ற அரக்கர்களோ தன்னை ஒன்றுஞ் செய்ய மாட்டார்கள்; தன்னைக் கண்டால் அவர்கள் அஞ்சத்தான் செய்கிறார்கள் என்ற உறுதியில் இருக்கிறாள்.

மேலும், தனியான ஆசை ஒன்று அவளது மனசில் துடித்துக் கொண்டிருக்கிறது. தன் நாயகன் உலகத்திலேயே சிறந்த வீரன். அவன் தன்னை அபாரமாக மதித்திருக்கிறான். இந்த உண்மை உலகத்துக்குத் தெரிய வேண்டும். எப்படித் தெரியும்? இலங்கைக்கு வந்து அரக்கர்களை யெல்லாம் போரில் கொன்று வெற்றியை நாட்டித் தன்னை மீட்க வேண்டும். அப்போதுதானே தெரியும் என்று எண்ணியவளாய் அனுமனிடம் விஷயத்தைச் சொல்லுகிறாள்.

அனுமனும் விஷயத்தை அறிந்து கொண்டான். விடை பெறத் தயாராகவே இருக்கிறான்.

“தாயே, நீ சொல்லுகிறபடியே செய்கிறேன். ராமபிரானிடம் போய்த் தெரிவிக்க வேண்டியதைச் சொல்லியருள வேண்டும்” என்கிறான்.

சீதையும் சொல்லுகிறாள்:

“இன்னும் ஒரு மாசம்தான் உயிரை வைத்துக் கொண்டிருப்பேன். உன்னிடம் நான் சொல்லுகிற உறுதியான வார்த்தை இது.”

**இன்னும் ஈண்டொரு**
**திங்கள் இருப்பல்யான்;**
**நின்னை நோக்கிப்ப**
**கர்கின்றேன்; நீதியோய்,**
**பின்னை ஆவி**
**பிடிக்கின்றிலேன்; அந்த**
**மன்னன் ஆணை**
**இதனைம னக்கொள் நீ!**

[இன்னும் ஈண்டு ஒரு திங்கள் இருப்பல் யான்: இன்னும் இங்கே ஒரு மாசம் உயிரை வைத்துக் கொண்டிருப்பேன்; பகர்கின்றேன்: உறுதியாகச் சொல்லுகிறேன்; நீதியோய்: வாழ்க்கை முறையெல்லாம் தெரிந்தவன் நீ; பின்னை ஆவி பிடிக்கின்றிலேன்: அந்த ஒரு மாசம் கழிந்த பிறகு உயிரை வைத்துக் கொண்டிருக்க மாட்டேன்; அந்த மன்னவன் ஆணை இதனை மனக்கொள் நீ: இதை லேசான காரியமாக எண்ணக் கூடாது. அந்த ராமனது ஆணை என்றே கருத வேண்டும் நீ.]

* * *

ராமன் வந்து தன்னை மீட்பான் என்ற உறுதி மனசில் ஏற்பட்டதில் குறையில்லை. ஆனாலும் ஒரு சபலத்தினால் — பெண் தன்மைக்குண்டான சபலத்தினால் — வேண்டாத சந்தேகங்கள் வந்து சீதையின் மனசைக் குழப்புகின்றன.

"ராமனுக்குத் தகுந்த மனையாள் அல்ல நான். ஆனாலும் என்னிடத்தில், பெண்பாலானது பற்றி, இரக்கங் கொள்ள வேண்டும். அந்த இரக்கம் ஒரு வேளை யில்லாமற் போய் விடுமோ?"

'ஆரம் தாழ்திரு
மார்பற்(கு)அ மைந்ததோர்
தாரம் நான்அலன்
ஏனும், தயாவெனும்
ஈரந்தான் அகத்(து)
இல்லெனன் ஏனும்,தன்
வீரம் காத்தலை
வேண்'டென்று வேண்டுவாய்.

[ஆரந் தாழ் திருமார்பற்கு: மாலைகள் அணிந்து விளங்கும் மார்பனான ராமனுக்கு; அமைந்ததோர் தாரம் நான் அலன் ஏனும்: தகுதியான மனைவியாள் நான் அல்ல என்பது உண்மையானாலும்; தயாவெனும் ஈரந் தான் அகத்து இல்லை யென்றாலும்: கருணை என்கிற இரக்கம் மனதில் இல்லாமற் போனாலும் போகட்டும்—ஆனால்; தன் வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்: தனக்குரிய வீரத்தைக் காக்க வேண்டும் அல்லவா, அதை விரும்பிக் கைக்கொள்ளுவாயாக என்று ராமனை நீ பிரார்த்திப்பாயாக.]

சந்தோஷம், சந்தேகம், பயம் எல்லாம் கலந்து மனசைக் கலக்குகிற நிலையிலிருந்து உண்டாகிற உண்மையான வார்த்தைகள்தான்!

# சொந்த நாட்டை நம்புவோம்!

1. எட்டவுன்ச ரேசன்மேலும் குறையப்போவுதாம்
எடுத்தகண்ட்ரோல் மீண்டும்வந்து சேரப்போவுதாம்
ஒட்டிப்போன வயிறுஎப்போ நிறையப்போறதோ ?
ஒடுங்கிப்போன உடம்புஎப்போ தேறப்போறதோ ?

2. பதுக்கல்கொள்ளை லாபக்காரன் பாடுகொண்டாட்டம்
பயிருவைக்கும் பாவிமவன் பாடுதிண்டாட்டம்
'எதுக்குஇந்த ஏர்பிடிக்க வேணும்?' என்கிறான்
எங்கேயாச்சும் கூலிவேலை செய்யப்போகிறான்!

3. போனஸ்கொடுத்துப் பார்த்துஒண்ணும் புண்ணியமில்லே
புதுக்கிணறு வெட்டிப்பார்த்துத் தண்ணியுமில்லே
மானம்பார்த்து ஏங்கிநின்னு மாரிபெய்யுமோ ?
மந்திரிகள் சொல்லிவிட்டா நெல்லுவிளையுமோ ?

4. அக்ரிகல்சர் டிபார்ட்மெண்டு அழுதுவடியுது
ஆமைபோற வேகத்திலே அதுவும்போவுது
டிக்ரிபெற்ற ஆபீசரு பார்க்கவாராரு
டக்குநடை போட்டுவிட்டுத் திரும்பிப்போறாரு!

5. அரிசிப்பஞ்சம் ஆடைப்பஞ்சம் ஆபத்தானது
அரசாங்கத்தை ஆட்டிவைக்க ஏதுவானது
தரிசுநிலத்தைப் பண்படுத்திப் பயிருவைக்கணும்
தவணைவைத்துக் கடன்கொடுக்கத் தயவுவைக்கணும்!

6. வெள்ளைக்காரன் காலத்திலே வெட்கங்கெட்டுப்போய்
வெளிநாட்டையே நம்பிவாழ்ந்த வாழ்வைவெறுக்கணும்
கள்ளமார்க்கெட் காரர்கொஞ்சம் கண்திறக்கணும்
காந்திமகான் வாக்கைஅவர்கள் காக்கப்பார்க்கணும்!

7. உற்பத்தியைப் பெருக்கநல்ல திட்டம்போடணும்
ஊரைப்பிடித்த பஞ்சப்பேயை ஓட்டப்பார்க்கணும்
சொற்பகாலம் கூடச்சும்மா சோம்பியிராமல்
சொந்தநாட்டை நம்பிச்சோறு தின்னப்பார்க்கணும்!

—விந்தன்



— சந்திரா

# சாரதாவின் கணவன்

ஜோமாஸ்

என் அத்தை பெண் சாரதாவும் நானும் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தோம். ஒரே வீட்டில்—அதாவது என் அத்தை வீட்டில்—வளர்ந்து வந்தோம். கணக்குப் போடுவது, பாடம் படிப்பது, எதாவது காரியம் செய்வது எல்லாம் இருவரும் சேர்ந்துதான் செய்வோம். சாரதா நான் இல்லாமல் மருந்துகூடச் சாப்பிட மாட்டாள்.

சாரதாவின் தகப்பனார் பெரிய வக்கீல். அவருக்கு நல்ல வரும்படி. கார், பங்களா, வேலைக்காரர்கள் முதலிய சகல அந்தஸ்துகளுடனும் பெரிய மனிதராக வாழ்ந்து வந்தார்.

சாரதா மிகவும் படபடப்பான சுபாவமுடையவள். மேலும் அவள் தன் தகப்பனாருக்கு ஒரே பெண். அவர் அவளுக்கு வீட்டில் சகல வசதிகளும் செய்து கொடுத்திருந்தார். எதையும் அவளுக்கு மனதில் வைத்துக் கொள்ளத் தெரியாது. எந்த ஒரு சின்ன விஷயத்தையும் என்னிடம் சொல்லி விட்டுக் கடகட வென்று களங்கமில்லாமல் சிரிப்பாள்.




இதையெல்லாம் படித்துவிட்டு, 'உனக்கும் உன் அத்தை பெண் சாரதாவுக்கும் காதல் பிறந்து விட்டதாக்கும்! அப்படித்தானே?' என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. ஆமாம், அத்தை பெண், மாமா பெண் இவர்களையெல்லாம் பற்றிக் கதை எழுத ஆரம்பித்தால், வழக்கம் போல் காதல், கல்யாணம், இல்லாவிட்டால் ஏமாற்றம் — இப்படித்தான் முடியவேண்டும் என்று ஒரு நியதி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் எனக்கும் சாரதாவுக்கும் காதல் ஏற்பட்டு விடுமோ, அல்லது கல்யாணம், ஏமாற்றம் இவைகளில் ஏதாவது ஒன்று நிகழ்ந்து விடுமோ என்று நீங்கள் பயப்படவேண்டிய அவசியமில்லை. ஏனென்றால் சாரதாவின் தகப்பனார் பணக்காரர். என்

ளைப் பற்றி நான் ஏன் சொல்லிக் கொள்ள வேண்டும்?

ஆகவே, அழகியான சாரதாவைக் கண்ட போதெல்லாம் என் உள்ளம் விம்மவில்லை. அவள் முகம் அரவிந்த மலராக எனக்குத் தோற்றம் அளிக்கவில்லை. என்னைக் காணும்போதெல்லாம் சாரதாவுக்கு 'குப்' பென்று வியர்க்கவில்லை. நான் என்ன வெய்யிலா, என்னைக் கண்டதும் அவளுக்கு வியர்த்துக் கொட்டுவதற்கு?

சாரதா காப்பியோ தீர்த்தமோ எனக்குக் கொடுத்தபோது அவள் விரல் என்னைத் தீண்டி அதனால் மின்சார அதிர்ச்சி ஏற்பட்டதில்லை. ஆனால், சின்ன வயதில் நானும் சாரதாவும் கண்ணாமூச்சி விளையாடினபோது நான் அவள் எங்கே ஒளிந்தாலும் கண்டு பிடித்து விடுவேன்; அப்பொழுது அவள் கோபித்துக் கொண்டு என் முதுகில் கை வைத்



திருக்கிறாள். அந்த அதிர்ச்சி இன்னும் என் முதுகுக்கு ஞாபகம் இருக்கிறது!

சாரதா பி. ஏ. வரையில் படித்தாள். அவள் பி. ஏ. படித்துக் கொண்டிருந்த போதே அவள் தகப்பனார் அவளுக்குக் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய ஆரம் பித்து விட்டார். ஒரு ரிடையர்டு ஜட்ஜின் குமாரன் சாரதாவின் கரம் பிடித்தான்.

மாப்பிள்ளையின் பங்களா மயிலாப்பூரில் இருந்தபடியால் அவன் தினந்தோறும் மாலை வேளைகளில் இங்கு வந்து விடுவான். சாரதாவை எங்கேயாவது உலாவப் போக லாம் என்று அழைப்பான். சாரதாவும் கொஞ்சம் நாணத்துடன் அவனோடு உலாவப் போய்விட்டு வருவாள். ஆனால் வரவர அவளுக்கு அவன் அழைப்பை ஏற்றுக் கொள்ள விருப்ப மில்லாமற் போய் விட்டது. அதற்குக் காரணம் மாப்பிள்ளை ஓயாமற் பேசி அரட்டையடிப்பதில் தேர்ச்சி பெற்றிருந்ததுதான். அத்துடன் சாரதா வுக்கு அப்போது பரீக்ஷை; கட்டுக் கட்டாகப் புத்தகங்களை வைத்துக் கொண்டு அவற் றுடன் போராடிக் கொண்டிருந்தாள். மாப் பிள்ளை விடாமல் பேசிச் சாரதாவைப் பரீட் சைக்குப் படிக்கவிடாமற் செய்து வந்தான்.

ஒரு நாள் சாரதா என்னிடம் வந்தாள். "அம்மாஞ்சி, நீ ஒரு உபகாரம் செய்ய வேண்டும். எனக்குப் பரீக்ஷைக்குப் படிக்க வேண்டி யிருக்கிறது. பாடப் புத்த கங்களைப் பார்த்தால் பயமா யிருக்கிறது!" என்றாள்.

"அதற்காக என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்? நானே உன் பாடங்களைப் படிக்க வேண்டும் என்கிறாயா?" என்று கேட்டேன்.

"அம்மாஞ்சி என்பது சரியாயிருக் கிறதே! என் பாடங்களை நீ படிக்க வேண் டாம். மாப்பிள்ளை வந்து தினம் எனக்குத் தொந்தரவு கொடுக்கிறார். அவர் என்னைத் தொந்தரவு செய்யாதபடி சமாளிக்க வேண் டும். பேச்சில் வல்லவனான உனக்கு இது பெரிய காரியமில்லை!" என்றாள் சாரதா.

"பேஷ்! நல்ல காரியம்தான். புருஷன், மனைவி இருவரையும் பேச விடாமற் செய் யும் புனித சேவையை நான் மேற்கொள்ள வேண்டுமாக்கும், இல்லையா!"

"இதில் தவறு ஒன்றும் இல்லையே! என் பரீக்ஷை முடிகிறவரையில்தானே உனக்கு இந்தத் தொல்லை?" என்று சாரதா என்னைக் கெஞ்சினாள்.

எனக்கு அவளிடம் அநுதாபம் பிறந்தது. அப்படியே ஆகட்டும் என்றேன்.

அன்று சாயந்திரமே என் வாக்குத் தத்தத்தை நிறைவேற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஆரம்பமாகிவிட்டது. மாப்பிள்ளை அன்று மாலை சாரதாவுடன் உலாவப் போகும் உத்தேசத்துடன் வந்தார். நான் பங்களாவின் வாசலிலேயே எதிர்கொண்டுபோய் அவரைத் தடுத்தாட்கொண்டேன். சாரதா தலைவலியினால் அவஸ்தைப் படுவதாகக் கூறி அவரைக் கடற்கரைக்கு அழைத்துச் சென்றேன்.

நீலக்கடலை நோக்கியபடி இருவரும் அமர்ந்தோம். உடனே பேச்சு ஆரம்பமாகியது. பலதார மணம், கலப்பு மணம், பெண்ணின் உரிமை, பெண்ணின் கடமை இவைகளே நாங்கள் அன்று எடுத்துக் கொண்ட முக்கியமான விஷயங்கள். விவாதம் மூன்று மணிநேரம் விடாமல் நடந்தது. அன்று ஆரம்பமான விஷயம் அப்படியே வளர்ந்து கொண்டே போயிற்று. அவர் மூளையைக் கழற்றி யெடுக்க வேண்டும் என்பதற்காக நானும் புதுப் புதுப் பிரச்னைகளைக் கிளப்பி விடுவேன். நானும் அவரும் விடாமல் உலாவப் போக ஆரம்பித்தோம். சாரதாவுடன் மாப்பிள்ளை உலாவப் போக வேண்டும் என்னும் விஷயமே அடிபட்டுப் போய் விட்டது. நான் தான் வாசலிலேயே அவருக்காகக் காத்திருக்கிறேனே!

சாரதாவுக்குப் பரீக்ஷை முடிந்து விட்டது. பி. ஏ. பாஸ் செய்து விட்டாள். அவள் எனக்கு அளவுகடந்த நன்றி யுணர்ச்சியுடன் நன்றி கூற முடியாமல் தவித்தாள்.

இது நடந்து ஐந்து வருஷங்களாகின்றன. சாரதா இப்பொழுது தன் கணவனுடன் பம்பாயில் இருக்கிறாள். என் எழுத்துப் பிழைப்புக்குச் சென்னையை விட்டு வெளியேற யோக்கியதை ஏது? ஆகையினால் நான் சென்னையிலேயே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறேன்.

இன்று மாலை ஜோதி கபேயில் காப்பி சாப்பிடச் சென்றவன் எனக்குச் சுமார் பத்தடி தூரத்தில் சாரதாவின் கணவர் டிபன் சாப்பிடுவதைக் கவனித்தேன். அவர் தானா என்று நன்றாய்க் கவனித்தேன். சந்தேகமில்லை; அவரேதான்!

"ஹலோ! மிஸ்டர் அம்மாஞ்சி! உங்களைப் பார்க்க வேண்டும் என்றுதான் இரண்டு நாட்களாக விலாசம் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன்......!"

"மாப்பிள்ளை ஸார்! பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும் என்பார்கள். பம்பாயில் சௌக்கியமாக இருக்கும் உங்களுக்கு என் ஞாபகம் என் வரப்போகிறது?"

"மிஸ்டர், நான் என் பொய் சொல்ல வேண்டும்? உங்களால் ஒரு காரியம் ஆக வேண்டி யிருக்கிறது. அதற்காகப் பம்பாய்க்கே உங்களை வரவழைத்துக் கொள்ளலாம் என்று பார்த்தேன். அப்புறம் அதற்கு அவசியமில்லாமற் போய் விட்டது. ஏனென்றால் எனக்கு உத்தியோகம் சென்னைக்கு மாற்றலாகி விட்டது. பகவான் என் பக்கில் இருக்கிறார் என்பது நிச்சயம். இல்லாவிட்டால் இன்று உங்களைக் காண்பேனா?" என்று சொல்லி அவர் புளகாங்கிதமடைந்தார்.

விஷயம் பகவான் வரையில் போய்விட்டதே, அப்படியானால் இதில் விசேஷம் இருக்க வேண்டும் என்று நினைத்த வண்ணம் மௌனமாய் நின்றேன்.

"என்ன! பிரமை பிடித்து நிற்கிறீர்களே! வாருங்கள், காப்பி சாப்பிட்டுக் கொண்டே பேசலாம்!" என்று சொல்லி மாப்பிள்ளை உட்கார்ந்தார்.

"நீங்கள் செய்ய வேண்டிய உபகாரம் உங்களுக்குச் சுலபமானதுதான். இரண்டு வருஷங்களுக்கு முன்பு வாசலில் என் தலையைக் கண்டதுமே நீங்கள் என்னுடன் பேசப் பிடித்துக் கொண்டு கடற்கரை வரையில் வந்து பல பிரச்னைகளை அலசிப் பிழிந்து விடுவீர்களல்லவா? சாரதா பரீக்ஷைக்குப் படிக்கும்போது என்னால் அவளுக்குத் தொந்தரவு ஏற்படக் கூடாது என்றுதானே அப்படிச் செய்தீர்கள்? அதே காரியத்தை மீண்டும் நீங்கள் இப்பொழுது செய்யவேண்டி யிருக்கிறது. எனக்கு இப்பொழுது ஆபீஸில் வேலை ரொம்ப அதிகம். வீட்டுக்குக் கொண்டு வந்து ஆபீஸ் வேலையைச் செய்ய வேண்டி யிருக்கிறது. ஆனால் வீட்டிலோ உங்கள் அத்தங்காளுடன் பேசிப் பல பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டி யிருக்கிறது. தயவு செய்து அந்தப் பொறுப்பை நீங்கள் வகித்தீர்களானால் எனக்குப் பேருபகாரமா யிருக்கும். உங்களுக்கு என் பங்களாவிலேயே இடம் தருகிறேன்!" என்றார்.

என் திறமைக்குத் தானாக மதிப்பு ஏற்படும் போது நான் ஏன் அதை விட்டுக் கொடுக்க வேண்டும்? மறுகணமே மாப்பிள்ளை வீட்டுக்குப் போய்விட்டேன்.



# தாயின் பூரிப்பு

—சி. கனகசபாபதி—

தெருவில் கூடைக்காரி கூவிக்கொண்டு போனாள். 'மாம்பழம்' என்று கூவக் கூடாதா? அவள்தான் என்ன செய்வாள்? கூடை நிறைய வாழைப்பழச் சீப்புகள் இருந்தன. பின் வாழைப்பழம் என்று கூவாமல் இருப்பாளா? வாழைப்பழம் ரவீந்திரனுக்கு மிக இஷ்டமான பொருள். பொம்மையும், மிட்டாயும்கூட அவ்வளவாக அவனுக்குப் பிடிக்காது; வாழைப்பழந்தான் அவனுக்கு அமிர்தம்.

ஆனால் அவனுடைய அம்மாவுக்கு அதன் மேல் ஒரே வெறுப்பு. ரவிக்கு வாழைப் பழமே வாங்கித் தரக்கூடாது என்பது அவளுடைய எண்ணம். ஏனென்றால் அந்த வாழைப் பழந்தான் ரவீந்திரனின் சின்னத் தங்கையை அவனிடமிருந்து பிரித்து விட்டது. கலாவுக்கு வயது இரண்டுக்கு மேலிருக்காது. திடீரென்று ஒருநாள் கடுமையான காய்ச்சல் அவளைப் பிடித்தது. ரவிக்குத் தெரியுமா, காய்ச்சலைப் பற்றி? அம்மா வாங்கித் தந்த வாழைப்பழத்தை அவளுக்கு ஊட்டிவிட்டான். கலாவுக்கோ சாவை வெல்ல இருந்த கொஞ்ச நஞ்ச சக்தியும் போய்விட்டது. அன்று மாலை ஐந்து மணிக்கெல்லாம் கலா கிர்ஜீவனாய்க் கிடந்தாள். ரவிதான் குழந்தையைக் கொன்றான் என்ற முடிவுக்குத் தாயுள்ளம் வந்துவிட்டது. அன்றைய தினத்திலிருந்து வாழைப்பழம் என்றால் தாயாருக்கு சுந்தின் உருவந்தான்.

ரவிக்குத் தெரியும், வாழைப்பழம் கேட்டால் அம்மா கோபிப்பாள் என்று. கோபித்தாலும் பரவாயில்லை; வாழைப்பழந்தானே அவனுடைய ஒரே குறிக்கோள்! ஆதலால் கொல்லைக்கு ஓடினான்.

"அம்மா.........அம்மா! கூடைக்காரி ரொம்ப நேரமாக் காத்திருக்கிறாள்!......
...ம்......வாழைப்பழம் கொண்டு வந்திருக்கிறாள். எனக்கு வாங்கித் தா; வேணும்!"

சாவித்திரிக்குக் கோபம் மூக்கு நுனியில் வந்து நின்றது. "என்னடா!" என்று அதட்டினாள். ரவிக்கு ஒரே திகில். உடனே வாசலுக்கு ஓடி வந்தான். கூடைக்காரி இல்லை. அதற்குள் அவளுக்கு என்ன கிராக்கியோ?—போயே போய்விட்டாள். ரவி தலையில் ஓங்கி அடித்துக் கொண்டு அவளை வைவது போல் வாயை அசைத்துக் கொண்டே வீட்டுக்குள் போனான். போய்க் கட்டிலில் உட்கார்ந்ததும் அன்று மனக் கணக்குப் பரீட்சை என்ற விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. அடாடா! மறந்தல்லவா போய்விட்டேன்! அதற்கென்ன, மனக் கணக்குக்கு யாராவது படிப்பார்களா? படித்து எழுதினாலும் இருபத்தைக்கு இருபத்தைந்து மார்க்குத்தான்; படிக்காமல் எழுதினாலும் அதுவேதான்!

ரவீந்திரன் வாழைப்பழ விஷயத்தில் மட்டும் மண்டுவே ஒழியப் படிப்பு விஷயத்தில் முதல்வன். பரீட்சை ஞாபகம் வந்ததும் சில மண்டுகளைப்போல் படபடவென்று நடுங்காமல், அவன் ஏளனமாக ஒரு இளஞ் சிரிப்புச் சிரித்துக் கொண்டான். உடனே எழுந்து மறுபடியும் அம்மாவை நாடிக் கொல்லைக்கு வந்தான்.

"அம்மா.........!"

"என்னடா? மறுபடியும் அதுக்குத் தானா?"

"அதுக்கில்லை; இன்னைக்கு மனக் கணக்குப் பரீட்சை! சீக்கிரம் தோசை வார்த்துக் கொடு, அம்மா!"

"அது சரி, கணக்கெல்லாம் படித்தாயா?"

"ஊம்."

அப்போதே சாவித்திரியும் வேலையை அப்படியே போட்டுவிட்டுத் தோசை சுட்டுக் கொடுக்க ஆரம்பித்தாள். ரவீந்திரன் வெகு பிரியத்துடன் சாப்பிட்டுக் கை அலம்பினான்.

"ரவீ! எத்தனை தோசை தின்றாய்!"

"................"

"ஏன், இதற்குள் மறந்து போயிற்றா? தோசையில் மறந்த மாதிரி பரீட்சையிலும் மறந்து போகாதே! என்ன, தெரிந்ததா?"

"ஊம்" என்று சொல்லிக் கைக்குட்டையால் கையைத் துடைத்துக் கொண்டு, உடனே சிலேட்டையும் சிலேட்டுக் குச்சியையும் எடுத்துக் கொண்டு ரவீந்திரன் பள்ளிக்குச் சென்றான்.

## 2

ரவி பள்ளிக்கூடம் போய்ச் சேருவதற்கும் பரீட்சை துவங்குவதற்கும் சரியாக இருந்தது. தன்னுடைய இடத்தில் அவன் உட்கார்ந்து கொஞ்ச நேரம் கழிந்ததும் வாத்தியார் முதல் கணக்கை ஆரம்பித்தார்.

"பிள்ளைகளே! ஒரு பழ வியாபாரி வாழைப் பழம் ஒன்று காலணா வீதம் விற்கிறான். பதினாறு பழங்களின் விலை என்ன?"

இது கணக்காகவே ரவீந்திரனுக்குத் தெரியவில்லை. நிஜமாக ஒரு பழ வியாபாரி விற்பதாகவும், தானே அந்தப் பதினாறு பழங்களை வாங்குவதாகவும், பிறகு அங்கேயே இரண்டைத் தின்பதாகவும் அவன் சிந்தனை செய்ய ஆரம்பித்தான். விலை என்ன என்பது பற்றிச் சிந்தனை எழவில்லை. கனிந்த, பருத்த பழங்களை முதலில் தின்பதாக எண்ணம் ஓடவே, சிலேட்டும், குச்சியும் ஞாபகத்திற்கு வரவில்லை. வாழ்க்கையில் ஆசாபாசங்களை வெறுத்துத் தள்ளிய ஒரு ஞானியைப்போல் அவன் அமர்ந்துவிட்டான்.

இரண்டாம் கணக்கு, மூன்றாம் கணக்கு சொல்லியாகி விட்டது. 'ரைட்' எடுத்த பையன்களின் முகங்களில் பெரிய காரியங்களைச் சாதித்துவிட்டோமென்று நினைத்துக் கொண்ட புன்னகைகள் அரும்பியிருந்தன. மண்டூகங்களின் முகங்களில் அசட்டுக் களை வழிந்து கொண்டிருந்தது. ஆனால் ரவியின் முகத்திலோ கவிதையின் பொலிவு. அவன் மூன்று கணக்கிலும் பூஜ்யம். இருந்தாலும் இன்னும் அவன் வாழைப் பழங்களைத் தின்றபாடில்லை!

நான்காவது கணக்கையும் வாத்தியார் போட்டு விட்டார். என்ன செய்வது? ரவி இன்னும் சாப்பிட்டாகவில்லையே! ஐந்தாம் கணக்குத்தான் கடைசிக் கணக்கு. பால்காரன் பால் விற்று வந்தானும். அதைப்பற்றி வேடிக்கையான கணக்கு!

ரவீந்திரன் இன்னும் விழிக்கவில்லை. அவனுடைய பழ வியாபாரி அவனிடம் பேச்சுக் கொடுத்தான்.

"தம்பி! பணம் வைத்திருக்கிறாயா?"

"எதற்காக?"

"பழம் வாங்கினாயே!"

"ஓ! மறந்து விட்டேன். ஒரு பழம் காலணாத்தானே! பதினாறு பழங்களுக்கும் என்ன ஆகிறது? பதினாறு காலணா நாலணா ஆகிறது. இதோ!" என்று சொல்லிக் கொண்டு ரவீந்திரன் சட்டைப் பையில் கையை விட்டான்.

என்ன விந்தை இது! சட்டைப் பையில் ரூபாய்க்குப் பதிலாகச் சிலேட்டுக் குச்சி இருந்தது. அதை எடுத்ததும் அவனுக்குச் சுய உணர்வு வந்தது. பையன்கள் எல்லோரும் சிலேட்டில் விடை எழுதிக் கொண்டிருக்கவே அவனும் 'நாலணா' என்று விடை எழுதிச் சிலேட்டைக் கீழே வைத்தான்.

வாத்தியார் கணக்குக்கு விடை சொன்னார். அவர் சொன்ன இருபத்தாறு ரூபாய்க்கும், நாலணாவுக்கும் எவ்வளவு வித்தியாசம்! கடைசிக் கணக்கிலும் பூஜ்யம். ஆனால் போய் வாழைப்பழம் தின்றதில் வெற்றிதானே!

பரீட்சை முடிந்தது. மற்ற பையன்களின் சிலேட்டுகளில் முழு எண்கள் குறிக்கப்பட்டிருந்தன. ஆனால் ரவியின் சிலேட்டில் மட்டும் 'இட்டிலி' அளவான ஒரு வட்டம் போட்டிருந்தது!






பாதையில் நடந்து போகும்போதுதான் ரவிக்கு அழுகை வந்தது. மேலும் அவனுடைய நண்பர்கள் சிலர் அவனைக் கேலி செய்துகொண்டே வந்தனர்.

"டேய், பாலு! கோழிமுட்டை வேணுமா?" என்றான் கருட்டை.

"ரவீந்திரன் வீட்டில் புதுக்கோழி இருக்குடா!" என்றான் கிண்டல் மணி.

"கோழி இல்லை, டோய்! வாத்து!" என்று கத்திக்கொண்டே ஓடினான் பயல் கொள்ளி ஒருவன்.

### 3

அதற்குள் சாவித்திரி சோறாக்கி, பருப்பு ரசம் வைத்துத் தயாராய் மகனுக்காகக் காத்திருந்தாள். மகன் எப்போது வருவான் என்று துடித்துக் கொண்டிருந்தது அவளுடைய தாயுள்ளம். ஒரு தடவை வாசலுக்கு வந்து பார்த்தாள். ரவியோடு படிக்கும் பிள்ளைகளெல்லாம் வந்து கொண்டிருந்தனர். ஆனால் ரவியை மட்டும் காணோம். அந்தப் பிள்ளைகளுடைய பேச்சில் 'ரவீந்திரன்' என்ற சொல் வரவே, சாவித்திரி பேச்சை உற்றுக் கவனித்தாள்.

"பாவம், ரவீந்திரன் பரீட்சையில் தூங்கி விட்டான். ஒரு கணக்குக்கூட 'ரைட்' இல்லை!" என்று சொல்லி ஒருவன் தன் வருத்தத்தை வெளியிட்டான்.

அடுத்தபடி மற்றொருவன், "ரவீந்திரன் இன்று சைபர்!" என்று சொல்லி வைத்தான்.

இவர்கள் ரவீந்திரன் வீட்டுக்கு முன்னால் வந்து சாவித்திரியைப் பார்த்ததும் பேச்சை நிறுத்திக் கொண்டனர். இவ்வளவு நேரமும் அவர்களுடைய பேச்சையே கவனித்துக் கொண்டிருந்த சாவித்திரி துக்கம் பொறுக்க மாட்டாமல், "என் ரவி எங்கே?" என்று கேட்டு அவர்களுடைய பதிலை ஆவலுடன் எதிர்பார்த்தாள்.

"ரவி பின்னால் வருகிறான். அவனுக்கு ........." என்று இழுத்துக் கொண்டே ஒரு பையன் பதிலுரைத்தான்.

"அவனுக்கு என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள் சாவித்திரி.

"அவனுக்குக் கணக்கில் சைபர்! பரீட்சையில் தூங்கிவிட்டான்!" என்ற பதிலை அந்தப் பையனே கூறிவிட்டு நகர்ந்தான். அவனைத் தொடர்ந்து மற்ற பையன்களும் நடந்தனர்.

சாவித்திரிக்கு என்னவோ போலிருந்தது. அப்படியே மயங்கியவள்போல் நிலையில் சாய்ந்து நின்றுவிட்டாள். சில நிமிஷங்கள் கழிந்ததும் மயக்கம் தெளிந்து மறுபடியும் ரஸ்தாவைப் பார்த்தாள். ரவி — ஆம், அவளுடைய கண்மணி — தலையைச் சாய்த்துக் கொண்டு தளர் நடை நடந்து வந்து கொண்டிருந்தான். அவன் அழுததைச் சுட்டிக் காட்டியது, நனைந்த மேல் சட்டை.

"ரவி!.........ரவி!"

ரவீந்திரன் பதில் பேசாமல் மறுபடியும் அழத் தொடங்கினான்.

"ரவி! என்னடா? என்ன வேணும்? என் அழுகிறாய்? சொல்ல மாட்டாயா?"

அப்போதும் அவன் பதிலளிக்கவில்லை.

சாவித்திரி ஒரு தட்டில் சோறு வைத்துப் பருப்பு ரசம் ஊற்றிக் கொண்டு வந்து அவனுக்கு ஊட்ட முயன்றாள். அப்போதுதான் ரவி, "காலையில் வாழைப் பழம் ஏன் வாங்கித் தரவில்லை?" என்று வாய் திறந்து கேட்டான். உடனே ஒரு நிமிஷம் கூடத் தயங்காமல் சாவித்திரி அவசர அவசரமாகக் கடைக்குப் போனாள். திரும்பி வரும்போது அவளுடைய கையில் ஒரு சீப்பு வாழைக் கனிகள் இருந்தன.

அந்தக் கனிகளை யெல்லாம் ஒரு தட்டில் வைத்து ரவியின் முன் வைத்தாள்.

"அம்மா! எனக்குத்தானே?" என்றான் ரவீந்திரன்.

"உனக்கில்லை!" என்று சாவித்திரி வேண்டுமென்றே சொன்னாள்.

அதைக் கேட்ட ரவியின் கண்களில் நீர் துளித்தது.

"ஐயோ! அதற்குள் அழ ஆரம்பித்துவிட்டாயே! என் கண்மணிக்குத்தானே கடைக்குப் போய் வாங்கி வந்தேன்?"

சாவித்திரி இவ்விதம் கூறிக்கொண்டு ஒரு கனியை அவனுக்கு ஊட்டினாள். ஒரே விழுங்கில் பழத்தைத் தீர்த்து விட்டான், அந்தப் பக்காத் திருடன்.

"அம்மா! அந்தப் பழமும் எனக்குத் தானே?"

"எல்லாம் இந்தக் குட்டி வாய்க்குத் தான்!" என்றாள் சாவித்திரி. ரவி ஒவ்வொரு பழமாகத் தின்று கொண்டே வந்தான். இன்னும் இரண்டே இரண்டு! ஒன்று தனக்கு; மற்றொன்று அம்மாவுக் கென்று முடிவு செய்து கொண்டான். முதலில் ஒரு பழத்தை எடுத்து அம்மாவுக்குக் கொடுத்தான். அவள் அதை வாங்க மறுத்து விட்டாள். எப்படியாவது தந்திரம் செய்து கொடுக்க வேண்டும் என்பது ரவியின் மனம்.

"அம்மா! அ, ஆ, சொல்லு!" என்று தன் தந்திரத்தைப் பிரயோகித்தான். சாவித்திரி சிரித்துக் கொண்டே வாயைத் திறந்தாள். ரவீந்திரன் பழத்தை எடுத்து ஊட்டி விட்டான். அப்போது ரவியைப் பார்க்க வேண்டுமே! காலை அகட்டிக் கொண்டான்; கையை வீசிக் கொண்டான்; உடலை நெளித்துக் கொண்டான்; குறுகுறுத்த பார்வையைக் கண்களில் எப்படியோ வரவழைத்துக் கொண்டான்; தோட்டத்துத் தென்னங் கன்றைப் போல் நெஞ்சை அள்ளிக் கொண்டான்!

சாவித்திரி பெரு மகிழ்ச்சி கொண்டு கடைசிப் பழத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள்.

"அம்மா! அதையும் நீ சாப்பிடப் போகிறாயா?" என்று கேட்டான் ரவி.

அடுத்த விநாடியில் அதுவும் அங்கே இல்லை. அதன் பிறகு தட்டிலிருந்த பருப்பு ரசம் ஊற்றிய சோற்றை ரவி சாப்பிட்டான் என்று சொல்லவும் வேண்டுமா?

* * *

அன்று சாயங்காலம் பள்ளியிலிருந்து ரவி திரும்பி வந்தான். சாவித்திரி, "மார்க் என்ன?" என்று கேட்டதற்கு, "இரண்டு சைபர்!" என்று பதில் கொடுத்தான்.

"என்னடா, இரண்டு சைபரா?"

"ஆமாம், அம்மா! இரண்டு சைபரும் முன்னால் ஒரு கோடும்! இதோ, பார்!" என்று சொல்லி ரவி சிலேட்டைத் தூக்கிக் காட்டினான்.

அதில் நூறு மார்க்கு இருந்தது. அதைப் பார்த்த தாயின் உள்ளம் பூரித்தது.

---

# சங்கீத சாமர்த்தியம்!



சங்கீத வித்வானின் மனைவி:— இன்றைக்குப் 'பீச்'சில் ஒரே கூட்டமாயிருக்கிறதே!



சங்கீத வித்வான்:— ஆ! இதென்ன பிரமாதம்! சற்று இரு......தர்ரே...னன்......று!



மனைவி:— அடாடா! உங்கள் சங்கீதத்துக்குத்தான் என்ன மகிமை! என்ன சாமர்த்தியம்!



# வளரும் தமிழ்

## திருச்செந்தூர்

சித்திர வேலைப்பாட்டுக்கும் கலைப் பண்புக்கும் புகழ்பெற்ற நம்முடைய செந்தமிழ் நாட்டுத் திருக்கோயில் ஏதாவது ஒன்றைப் பார்க்கும்போதெல்லாம், "அடாடா, ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை இந்தக் கோயிலைப் பற்றி எப்போது புத்தகம் எழுதப் போகிறாரோ?" என்றுதான் தோன்றும்.

ஸ்ரீ ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை எழுதிய 'தஞ்சைப் பெருங் கோவில்' 'சோழர் கோவில் பணிகள்' முதலிய அருமையான புத்தகங்களைப் படித்தவர்களுக்கு அப்படித் தோன்றுவதிலே வியப்பு எதுவும் இல்லை.

ஸ்ரீ பிள்ளை, தமிழ்நாட்டுக் கோயில்களிலே மிகவும் பழமையானதும் புகழ் பெற்றதுமான திருச்செந்தூர்க் கோயிலைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதியிருக்கும் ஒரு புத்தகம் சமீபத்தில் வெளி வந்திருக்கிறது.

தமிழ் மக்கள் வழிபடும் தெய்வங்களிலே முருகப் பெருமானுக்கு ஒரு தனி மகிமை உண்டு. குன்றா இளமைக்கும் குறையா வலிமைக்கும் முருகன் ஒரு சின்னமாகப் போற்றப்படுகிறான். முருகன் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஆறு புண்ணிய க்ஷேத்திரங்களிலே திருச்செந்தூரும் ஒன்று. தமிழ்நாட்டுக்குத் தெற்கே, ஒரு மூலையில், கடலுக்கு அருகே விளங்கும் இந்தப் புண்ணிய ஸ்தலத்தைப் புகழ்ந்து பாடாத கவியோ, போற்றாத பழந்தமிழ் நூலோ வெகு அருமை. இந்தத் திருக்கோவிலைப் பற்றிய பண்டைய வரலாற்றையும் பெருமையையும் ஸ்ரீ பிள்ளையவர்கள் இந்தப் புத்தகத்தில் ரசமாகவும் தெளிவாகவும் எழுதி யிருக்கிறார்கள். ஸ்ரீ பிள்ளையவர்களுடைய மற்ற நூல்களைப் போல இந்நூலும் மிகவும் பாராட்டப்படும் என்பதில் சந்தேகம் இல்லை. விலை ரூ. 2.

## கீதத் தமிழ்

சென்ற இரண்டாவது உலக மகா யுத்தத்தால் உலகத்துக்கு எத்தனையோ தீமைகளும் சொல்ல முடியாத கஷ்டங்களும் ஏற்பட்டபோதிலும் தமிழ் பாஷையைப் பொறுத்தவரை அதற்கு ஒரு நன்மை ஏற்படத்தான் ஏற்பட்டிருக்கிறது.

"கீதத் தமிழ்" என்ற புத்தகத்தை எழுதிய ஸ்ரீ திருவாசகம் கே. எம். பால சுப்பிரமண்யம் தம்முடைய முகவுரையில் எழுதியிருக்கும் கீழ்க்கண்ட விஷயத்தைப் படித்துப் பாருங்கள்:

"நடைபெற்ற வந்த யுத்தம் என்னை இசைத் தமிழ் உலகத்திலும் எதிர்பாராத விதமாகப் புகுத்திவிட்டது. 1943-ம் வருஷம் மே மாதம் சென்னை மாகாண யுத்த இசை விளம்பர அதிகாரியாகச் சர்க்கார் என்னை நியமித்தபொழுது உண்மையிலேயே நான் மகிழ்ந்தேன். ஏனெனில், இந்த உத்தியோகத்தை யான் வகித்திருக்கவில்லையென்றால், இன்று இந்த நூல் வெளிவந்திருக்க முடியாது."

இதைப் படித்துவிட்டு, "கீதத் தமிழ்" என்ற மேற்படி கீர்த்தனைத் தொகுதியையும் ஒருமுறை புரட்டிப் பார்த்தால் "உலக மகா யுத்தம் வாழ்க!" என்று சொல்லத்தான் தோன்றும்.

இந்தப் புத்தகத்தில் உள்ள நூறு கீர்த்தனைகளும் உண்மையான ஒரு பக்த மணியின் இதயத்திலிருந்து வெளிவந்தவையாகும். தேவார திருவாசகங்களிலே ஊறி ஊறிப் பண்பட்டுப்போன ஒரு இதயத்திலிருந்துதான் இத்தகைய கீர்த்தனைகள் வெளிவந்திருக்க முடியும்.

ஸ்ரீ பாலசுப்ரமண்யம், இந்தப் புத்தகத்தின் மூலம் இசைத்தமிழ் உலகத்துக்கு ஒரு சிறந்த தொண்டாற்றி யிருக்கிறார். விலை ரூ. 3. கிடைக்குமிடம்: முருகவேள் புத்தகசாலை, ராயப்பேட்டை, சென்னை.

## 'பெண்ணினம்'

இந்திய சுதந்திரத்துக்கும் இந்தியப் பெண் குலத்துக்கும் அருந்தொண்டாற்றிய டாக்டர் அன்னி பெஸண்டின் படத்தை முகப்பில் தாங்கிக்கொண்டு, சென்னை, பிராட்வே, 132-லிருந்து 'பெண்ணினம்' என்ற ஒரு புதிய மாதப் பத்திரிகை வெளிவந்திருக்கிறது. இதன் ஆசிரியை ஸ்ரீமதி த. க. மனோன்மணி அம்மையார். பெண் குலத்தைச் சீர்திருத்துவதற்காக, ஸ்ரீமதி குட்டியம்மாளு அம்மாவைப் போன்ற பல பிரபல பெண்மணிகள் எழுதிய கட்டுரைகள் இதில் காணப்படுகின்றன. பெண்மக்களுக்கு உண்மையாகவே தொண்டாற்றக் கருதும் இத்தகைய பத்திரிகைகளுக்குத் தமிழ் நாட்டில் நல்ல ஆதரவு இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. தனிப் பிரதி விலை அணா 6; வருஷ சந்தா: ரூ. 5; ஆறு மாத சந்தா: ரூ. 3.

# இலங்கையில் சென்னைக் கல்வி மந்திரி

ராஜ அரியரத்தினம்

சில மாதங்களுக்கு முன்னர் விபுலானந்த அடிகளார் துறவுபூண்ட திருநாளை யாழ்ப்பாணத்து மக்கள் சிறப்பாகக் கொண்டாடினர். தமிழ் நாட்டின் பேராசிரியர்களும் அடிகளாரின் மாணுக்கர்களும் இதிற் கலந்து கொண்டனர். அடிகளாரின் ஞாபகார்த்தமாக ஓர் இசைக் கல்லூரியும் தமிழ் ஆராய்ச்சிக் கழகமும் யாழ்ப்பாணத்தில் நிறுவப்பட வேண்டுமெனவும் தீர்மானிக்கப்பட்டது.

விபுலானந்த அடிகளார் மட்டக்களப்பிலுள்ள காரைதீவு என்று சொல்லப்படும் இடத்திற் பிறந்தார். அப்படியிருந்த போதிலும் அன்னார் தமது வாழ்நாட்களிற் பெரும் பகுதியை இந்திய நாட்டுக்குச் சேவை செய்வதிலேயே கழித்துள்ளார்.

யாழ்நூல் அரசான இப்பேரறிஞருக்குச் சிறந்த ஞாபகச் சின்னமொன்றை நிலைநாட்ட வேண்டுமென மட்டக்களப்பு மக்கள் தீர்மானித்தனர். அடிகளார் கல்லடி உப்போடையில் நிறுவிய சிவானந்த வித்தியாலயத்திலேயே அந்த மணிமண்டபத்தை எழுப்ப வேண்டுமெனவும் முடிவு செய்தனர். இச் சிறந்த ஞாபகார்த்த மண்டபத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டும் பெருமை சென்னை மாகாணக் கல்வி மந்திரியார் திரு தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களுக்குக் கிடைத்தது.

ஸ்ரீ இராமகிருஷ்ண சங்கத்தாரின் அழைப்பை யேற்றுச் சென்னைக் கல்வி மந்திரியார் சென்ற 17-ந் திகதி விமான மார்க்கமாகக் கொழும்பு வந்தடைந்தார். அடுத்த நாளாகிய சனிக்கிழமை யன்று (18-9-48) புகை வண்டி மார்க்கமாக மட்டக்களப்புக்குப் பிரயாணமானார். அங்குள்ள விவேகானந்த மண்டபம் தாய் நாட்டின் நேசபக்தனை ஆவலுடன் எதிர்பார்த்து நின்றது. மண்டபத்தின் உள்ளும் புறமும் பெருந் திரளான மக்கள் கூடி நின்றனர்.

மட்டக்களப்பு மக்களின் சார்பில் பட்டறை சங்கம் அளித்த வரவேற்பை உவந்தேற்ற மந்திரியார், அவர்களின் உள்ளங் குளிரும்படியான ஒரு சொற்பொழிவை யாற்றிவிட்டு விபுலானந்த அடிகளார் நிறுவிய சிவானந்த வித்தியாலயத்தை நோக்கிச் சென்றார்.

களையைத் தீர்த்துக் கொள்ளுவதற்காக மந்திரியார் சிவபுரியிலே தங்கியிருந்தார். சிவபுரி, சிவானந்த வித்தியாலயத்திலுள்ள திருமடமாகும். சிவபுரியின் சிறப்பைப்பற்றி விபுலானந்த அடிகளார் ஓரிடத்தில்,

"இளக்குவளை மதுப்பெய்ய
இளமுல்லை நகைபுரிய—வெங்குருகுய
வளப்புநிறை சிவபுரியும்
சிவானந்த மணிக்கழக மாண்புங்கண்டு"

எனப் பாடியுள்ளார்.

இங்கு அடிகளார் ஓர் சிறிய தொட்டியும் கட்டி அதிற் செங்கழுநீர் என்னும் செவ்வாம்பலை உண்டாக்கி மகிழ்ந்து வந்தார். நீர் நிறைந்த அந்தொட்டி இன்றும் அங்கு உண்டு.

சிவானந்த வித்தியாலயத்திலுள்ள மாணவர் இல்லத்தைப் பார்வையிட்ட பின்னர் சரியாக நாலரை மணிக்குச் சென்னைக் கல்வி மந்திரியார் விபுலானந்த அடிகளாரின் ஞாபகார்த்த மண்டபத்துக்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். இதற்கு முன்னதாக அங்குள்ள அடிகளாரின் சமாதியைத் தரிசித்து மலர் தூவி வணங்கினார்.

வித்தியாலயத்து மைதானத்தில், அழகுற அலங்கரிக்கப் பெற்ற வெளியில் கூட்டம் நடைபெற்றது. சுவாமி நடராஜானந்தா தலைமை வகித்தார்.

அடிகளார் தமிழுக்குச் செய்த அரும்பணிகளையும், அவருடைய புலமையையும் பாராட்டிப் பேசிய மந்திரியார், யாழ்நூல் அரங்கேற்றத்தின்போது தாம் பிரசன்னமாக இருக்கும் பாக்கியத்தைப் பெற்றதாகவும் உணர்ச்சி ததும்பப் பேசினார்.

அன்று மாலை மந்திரியார் அவர்கள் கொழும்புக்குப் பயணமானார். அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை (19—9—48) கொழும்பிலுள்ள விவேகானந்த மண்டபத்திற் சொற்பொழிவு நிகழ்த்தினார். அடிகளாரின் திருவுருவப் படத்தையும் திறந்து வைத்தார்.

கொழும்பிலே நின்றபோது ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திலும் அருமையான சொற்பொழிவை நிகழ்த்தி மக்களின் சிந்தனையைக் கிளர்த்தி வைத்தார்.

யாழ்ப்பாணத்துக்கு விஜயம் செய்திருந்த கல்வி மந்திரியார் அவர்கள் அங்குள்ள இராமகிருஷ்ண சங்கத்தைச் சேர்ந்த வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயத்தின் புதுக் கட்டடத்தைத் திறந்து வைத்தார். இக்கலாசாலையின் அதிபரான ஸ்ரீ ச. அம்பிகைபாலன், மந்திரியார் யாழ்ப்பாணத்தில் சௌகரியமாகத் தங்குவதற்கான சகல ஏற்பாடுகளையும் அன்பர்களின் உதவியுடன் செய்து வைத்தார்.

வித்தியாலயக் கட்டடத்தைத் திறந்து வைப்பதற்கு முன்னர் மந்திரியார் அன்று பகல் (21—9—48) இராமநாதன் கல்லூரி, கோப்பாய் மகளிர் அரசினர் ஆசிரிய கலாசாலை, கொக்குவில் இராமகிருஷ்ண சைவ வித்தியாசாலை, வட்டுக் கோட்டையிலுள்ள யாழ்ப்பாணக் கல்லூரி முதலியவற்றைப் பார்வையிட்டனர். சமுகசேவா நிலையத்துக்கும் மந்திரியார் அவர்கள் விஜயம் செய்தார்கள்.

வண்ணை—வைத்தீசுவர வித்தியாலயத்தில் மந்திரியார் பேசும்போது சுதந்திரத்தின் அடிப்படை, கல்வியின் வளர்ச்சியெனவும், தமிழ் நாட்டில் நடைபெறும் கல்வியாக்க வேலைகள் இலங்கையிலுள்ள மக்களுக்கும் பெரிதும் பயன்படுமெனவும் குறிப்பிட்டனர்.

அடுத்த நாட் காலை காங்கேசன் துறையிலுள்ள — பலாலி ஆகாய விமானத்தை யடைந்து அங்கிருந்து விமான மார்க்கமாகச் சென்னைக்குப் பறந்து சென்றார்.

# ராமுவின் பயம்!

**ரா. வீழிநாதன்**

ராமு மிகவும் பயந்தாங்கொள்ளி. இருட்டிவிட்டால் வீட்டை விட்டு வெளிக் கிளம்பவே மாட்டான். சாப்பிட்டுவிட்டுக் கையலம்பப் போனால் கூட யாராவது பின்னோடு துணை வர வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பான். அதனால் 'பயந்தாங்கொள்ளி ராமு' என்ற பட்டப்பெயர் அவனுக்கு நிலைத்து விட்டது.

அவனுடைய பயத்தை எப்படியாவது போக்கிவிட வேண்டுமென்று அப்பா நினைத்தார். ஆகவே, அடுத்த தெரு அண்ணாசாமி வாத்தியாரிடம் இரவு எட்டு மணிக்கு மேல் 'டியூஷ'னுக்குப் போய்வரும்படியாக ஏற்பாடு செய்தார்.

“போகும் வழியிலே அந்த அரச மரத்தடியில் பிசாசு இருக்காம் அப்பா, நான் தனியாகப் போகமாட்டேன்!” என்று ராமு பயந்தான்.

“அதெல்லாம் ஒன்றும் இல்லை!” என்று சொல்லி, அவனோடு சில நாட்கள் அப்பா துணையாகச் சென்று வந்தார். பிறகு தனியாகப் போய் வருமாறு சொன்னார்.

ஆனாலும் அவனுடைய தோழர்கள் விடவில்லை. “ராமு, நேற்று ராத்திரி அந்த அரச மரத்தடி பக்கமா போனோம்டா! 'கன்னங்கரேல்'னு ஒரு பிசாசு எங்ககிட்ட வந்துடுத்துடா! கண்ணை இறுக மூடிக் கொண்டு நாங்கள் ஓடியே வந்துட்டோம்டா!” என்று கூறி அவனுக்கு இன்னும் அதிகக் கிலியை உண்டு பண்ணி விட்டார்கள்.



அன்று முதல் ராமு மீண்டும் அப்பாவைத் துணைக்கு அழைத்துச் சென்றான். அப்பாவின் பின்னோடு போனாலும் ராமு பயந்த வண்ணம் தான் அடி எடுத்து வைப்பான். “அப்பா! இதோ, கறுப்பா ஒரு பிசாசு வருகிறது, அப்பா! என் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போ, அப்பா!” என்று பரிதாபமான குரலில் முணுமுணுப்பான்.

அப்பாவுக்கு இது பெரிய வேதனையாயிருந்தது. அவர் எப்படியாவது ராமுவின் பயத்தை அகற்றிவிட வேண்டுமென்று தீர்மானித்தார். ஒரு நாள் அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. மறு நாள் ராத்திரி வாத்தியார் வீட்டுக்குக் கிளம்புவதற்கு முன்னால் அவர் ராமுவைக் கூப்பிட்டு, “டேய், ராமு! இன்னிக்கு அந்தப் பிசாசைக் கண்டு பிடிச்சுடுவோம், பயப்படாதே!” என்றார்.

“எப்படி அப்பா, கண்டு பிடிப்பாய்?” என்று கேட்டான் ராமு.

“இரண்டு கையிலேயும் கரியை அரைச்சுக் குழப்பி வச்சுக்கோ! அரச மரத்தடி பிசாசு கிட்ட வந்ததுன்னா, அதன் கன்னத்திலே கரியைத் தீத்தி விடு. நான் நாளைக் காலை பொழுது விடிவதற்குள்ளே அதை எப்படியாவது தேடிக் கண்டு பிடிச்சுடறேன்! என்ன செய்கிறாயா?” என்றார் அப்பா.

“எனக்குப் பயமாய் இருக்குமே, அப்பா!” என்றான் ராமு.

“நான் துணைக்கு வருகிறபோது உனக்கென்னடா பயம்?” என்று அவர் ராமுவைச் சமாதானப் படுத்தி வைத்தார்.

ராமுவும் அவன் அப்பாவும் அன்

றிரவு அடுத்த தெரு வாத்தியார் வீட்டுக்கு வழக்கம்போல் புறப்பட்டார்கள். அரச மரத்தடியை நெருங்கும்பொழுது பிசாசு வருவதுபோல் ராமுவுக்குத் தோன்றிற்று. அவன் தழதழத்த குரலில், "அப்பா!" என்றான்.

"என்னடா, பயப்படாதே! நான் சொன்னபடி செய்!" என்றார் அப்பா.

அவ்வளவுதான்; ராமு எப்படியோ கரிக் கையைத் தீற்றிவிட்டு, "அப்பா! தீத்திவிட்டேன்!" என்றான்.

"சரி" என்று சொல்லி விட்டு அப்பா, ராமுவுடன் வாத்தியார் வீட்டை அடைந்தார். அடுத்த நிமிஷம் வாத்தியாரிடமிருந்து ஒரு கண்ணாடியை வாங்கி, "ராமு, இங்கே வா! வெளிச்சத்தில் உன்னுடைய முகத்தை இந்தக் கண்ணாடியில் பார்!" என்றார்.

ராமு கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! அவன் கரியைப் பூசியது பிசாசின் முகத்தில் அல்ல, தன்னுடைய முகத்திலேயேதான் பூசிக் கொண்டிருந்தான்!

"என்ன அப்பா, இது!" என்றான் ராமு வியப்புடன்.

"அடே அசடே! பிசாசு கிசாசுன்னு ஒன்றுமே கிடையாது; நீ வீணாகப் பயந்தாய்! 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்'ன்னு சொல்லுவார்களே, தெரியுமா? இனிமேல் பயப்படாதே, போ!" என்றார் அப்பா.

அன்று முதல் ராமு பயப்படுவது மில்லை; யாரையும் துணைக்குக் கூட்டிடுவதுமில்லை.

# காலக்ஷேபம்

### எறும்பு எங்கே?

அம்மா:—அடேய், பொய் சொல்லாதே. நீதானே பக்ஷணத்தை யெல்லாம் தின்றாய்?

சிறுவன்:—நான் தின்னவே யில்லை.

அம்மா:—நிஜத்தைச் சொல்லிவிடு!

சிறுவன்:—நிஜமாகச் சொல்லுகிறேன்: எனக்கு ஒன்றுமே தெரியாது. ஒருவேளை எறும்பு தின்றிருக்குமோ, என்னவோ!

அம்மா:—இதில் ஒரு எறும்புகூட இல்லையே!

சிறுவன்:—எல்லாம் எங்கே? இப்போது தான் நான் என் கை நிறையக் கொன்று நசுக்கிப் போட்டேனே!



### திருடனுக்கும் சேவை நாடா!

ஒரு தபாலாபீசுக்குள் ஒரு திருடன் திடீரென்று நுழைந்து ஜன்னலருகே சென்று அங்கு வேலை செய்து கொண்டிருந்த குமாஸ்தாவின் எதிரே ரிவால்வரைக் காட்டினான். குமாஸ்தா பேச நா எழாமல் நடுங்கிப் போய் விட்டார்.

திருடன்:—உன்னிடம் இருக்கும் மணி ஆர்டர் பணம், சேவிங்ஸ் பாங்க் பணம், இன்னும் கார்டு, கவர் விற்ற பணம் எல்லாவற்றையும் உடனே இப்படிக் கொடுத்துவிடு; இல்லாவிட்டால்......?

குமாஸ்தா (நடுங்கிக் கொண்டே):—நான் சேவிங்ஸ் பாங்க் அக்கவுண்டைக் கவனிப்பவன். அந்தப் பணத்தை வேண்டுமானால் கொடுத்து விடுகிறேன். மணியார்டர், இன்னும் மற்றப் பணத்துக்குத் தயவுசெய்து கடைசி ஜன்னலுக்குப் போக வேண்டும்!

### அவனுக்குத் தெரிந்தது!

ஸ்திரீ (ஸ்டேஷனில் ஒரு போர்ட்டரைப் பார்த்து):—இந்த ரயில்தானே பெங்களூர் போகிறது?

போர்ட்டர்:—ஆமாம், அம்மா!

ஸ்திரீ:—அது பெங்களூர் போகும் ரயில் தான் என்று நிச்சயமாக உனக்குத் தெரியுமா?

போர்ட்டர்:—நிச்சயமாக அது பெங்களூர் போகும் ரயில்தான், அம்மா! அப்படித்தான் ஸ்டேஷன் மாஸ்டர் சொல்லுகிறார், என்ஜின் டிரைவர் சொல்லுகிறார், டிக்கெட் பரிசோதகர் சொல்லுகிறார், அதுதான் எனக்குத் தெரியும், அம்மா!



### வேகம் எப்படி?

அவர்:—என் காருக்கு 'வேகம் அளக்கும் கருவி'யே தேவையில்லை. அது ஓட ஆரம்பித்ததும், மணிக்கு இத்தனை மைல் வேகம் போகிறது என்பதை நான் சரியாகச் சொல்லி விடுவேன்!

இவர்:—அது எப்படி?

அவர்:—என் கார் மணிக்குப் பத்து மைல் வேகம் போனால் காரிலுள்ள விளக்குகள் கட கடவென்று ஆடும்; பதினைந்து மைல் வேகம் போனால் 'மட் கார்டு'கள் நட நட வென்று அடித்துக் கொள்ளும்; இருபது மைல் வேகம் போனால் உடம்பிலுள்ள எலும்புகள் உதறும்!

# பேராசிரியர் வ. ரா. மணி விழா நிதி

தமிழ் நாட்டிலும் வெளியிலும் உள்ள பல அன்பர்கள் ஸ்ரீ வ. ரா. மணி விழா நிதி வசூலுக்குரிய காலத் தவணையையும் மணி விழாக் கொண்டாட்டத்தையும் தள்ளிப் போடவேண்டும் என்று கேட்டுக் கொண்டதின் பேரில் நாளது அக்டோபர் மீ 31உ மணி விழாவை நடத்துவதென்று முடிவாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. நிதி வசூலுக்குரிய காலமும் அக்டோபர் 31உ வரை நீடிக்கப்பட்டிருக்கிறது. தமிழன்பர்களும் நவயுக எழுத்தாளர்களும் பேராசிரியரின் அபிமானிகளும் இந்த மாதம் மீதமுள்ள இருபது தினங்களிலும் ஊக்கத்துடன் நிதி வசூலில் ஈடுபடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ராஜா சர் முத்தையா செட்டியார், அடையாறு, சென்னை | 1000 | 0 | 0 |
| பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தாரின் மூலம் வசூல் | 750 | 0 | 0 |
| ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, எம். எல். ஏ., ராஜபாளையம் | 500 | 0 | 0 |
| நவாப் ஸ்ரீ டி. எஸ். ராஜமாணிக்கம், மதுரை | 301 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், திருவாரூர் | 250 | 0 | 0 |
| ஸ்ரீ ட்ரேராஜன் அண்ணாமலைச் செட்டியார், சென்னை | 200 | 0 | 0 |
| ஸ்ரீ. பி. ஏ. சி. ராமசாமி ராஜா, இராஜபாளையம் | 200 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியார், காரைக்குடி | 101 | 0 | 0 |
| ஸ்ரீ கே. சாரங்கபாணி, சினிமா நடிகர், கும்பகோணம் | 101 | 0 | 0 |
| ஒரு அன்பர் | 100 | 0 | 0 |
| ஸ்ரீ எர். டி. ராஜா, சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர், திருச்சி | 100 | 0 | 0 |
| ஸ்ரீமதி நாகமணி கிருஷ்ணசாமி அய்யர், செங்கோட்டை | 100 | 0 | 0 |
| ஒரு அன்பர் | 100 | 0 | 0 |
| ஸ்ரீ வி. நாடிமுத்துப் பிள்ளை, பட்டுக்கோட்டை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு, சென்னை | 51 | 0 | 0 |
| ஸ்ரீ டி. முருகேசம் பிள்ளை, கோடம்பாக்கம் | 51 | 0 | 0 |
| ஸ்ரீ கிருஷ்ணசாமி வாண்டையார், பூண்டி | 50 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். சாம்பசிவய்யர், மன்னார்குடி | 50 | 0 | 0 |
| ஸ்ரீ கானா சுப்பாராவ், ஆசிரியர், சுதந்திரா, சென்னை | 50 | 0 | 0 |
| ஸ்ரீ ராமநாத் கிசோர், சென்னை | 50 | 0 | 0 |
| ஸ்ரீ ப. நீலகண்டன், காரைக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி, ஸ்டேஷன் டைரக்டர், திருச்சி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ மாணிக்கவாசக ஆச்சாரி, காரைக்குடி | 25 | 0 | 0 |
| டாக்டர் ஆர். மகாலிங்கம், கும்பகோணம் | 25 | 0 | 0 |
| கேப்டன் வி. ஆர். வரதபிள்ளை, திருநெல்வேலி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ சி. என். அண்ணாத்துரை, ஆசிரியர், திராவிடநாடு | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கா. ஸ்ரீ. ஸ்ரீ., மயிலாப்பூர் | 21 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. நாகப்பச் செட்டியார், ராங்கியம் | 15 | 0 | 0 |
| ஸ்ரீமதி வசுமதி ராமஸ்வாமி, சென்னை | 15 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஆர். பரமசிவக் கவுண்டர், கன்னிப்பட்டி | 15 | 0 | 0 |
| ஸ்ரீ ம. ப. பெரியசாமி, ஆசிரியர், தமிழ்க்கலைக் களஞ்சியம், சென்னை | 15 | 0 | 0 |
| ஸ்ரீ ராஜ அரியரத்தினம், ஈழகேசரி, சிலோன் | 15 | 0 | 0 |

ரூ. 10—0—0 நன்கொடை அளித்தவர்கள்: ஸ்ரீ ஏ. நாராயணன், ராங்கியம்; ஸ்ரீ. எம். வள்ளியப்பா, ராங்கியம்; ஸ்ரீ வி. லக்ஷ்மணஞ் செட்டியார், ராங்கியம்; ஸ்ரீ சுப்ரி, எம்.எல்.ஏ., கோயம்புத்தூர்; ஸ்ரீமதி எம். எல். கமலா, சென்னை; ஸ்ரீமதி விசாலாக்ஷி ஸ்வாமிநாதன், சென்னை; ஸ்ரீமதி சுகப்ரியா, சென்னை; ஸ்ரீ வி. எஸ். ராமசாமி, சுகலூர்; ஸ்ரீ கே. வி. வீரராகவன், ராணிப்பேட்டை; ஸ்ரீ டி. எஸ். சுவாமிநாத உடையார், மன்னார்குடி; ஸ்ரீ ஜி. ரங்கசாமி அய்யங்கார் எம். ஏ. எம். எல்., திருச்சி; ஸ்ரீ டி. கே. பி. எஸ். உடையார், நீடாமங்கலம்; ஸ்ரீ கே. எம். ஷெரீப், திருத்துறைப்பூண்டி; ஸ்ரீ கே. ராமச்சந்திரன், தியாகராயநகர்; ஸ்ரீ கே. சோமசுந்தரம், கம்பர் கழகம், ஸ்ரீ சி. ரகுநாதன், ஜில்லா கல்வி அதிகாரி, சித்தூர்.

ஆக ரூ. 160 0 0

ரூ. 5—0—0 நன்கொடை அளித்தவர்கள்: ஸ்ரீ கோபி, சித்திரக்காரர், சென்னை; ஸ்ரீ என். அழகு சேர்வை, ராங்கியம்; ஸ்ரீ எம். அருணாசலம் செட்டியார், ராங்கியம்; ஸ்ரீ குமரப்பச் செட்டியார், ராங்கியம்; ஸ்ரீ எம். சி. முத்துராமன் செட்டியார், ராங்கியம்; ஸ்ரீ சித்தன், ராங்கியம்; ஸ்ரீ ரு. பட்டு. வி. ர. சு. சோ., ராங்கியம்; ஸ்ரீ ஆர். சாரங்கபாணி, தக்கிணி ஹிந்த், சென்னை; டாக்டர் சி. ஆர். நாதன், வேலூர்; ஸ்ரீ ஜி. நம்மாழ்வார் நாயுடு, திருப்புறம்பயம்; கடம் ஆலங்குடி ஸ்ரீ ராமச்சந்திரன், திருச்சி; ஸ்ரீமதி ராஜம்மாள் ரங்கமணி, சென்னை; ஒரு அன்பர்; ஸ்ரீமதி கோமளம் ரங்கநாதன், சென்னை; ஸ்ரீ எம். வெள்ளப்பிரி, கல்வி ஏஜண்ட், பொன்னமராவதி; ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி ஆர். சீனிவாசன், பங்களூர்; ஸ்ரீ கே. என். எம். சுந்தரம், கன்னிமங்கலம்; ஸ்ரீ என். சுப்ரமணியம், அகில இந்திய ரேடியோ, திருச்சி; ஸ்ரீ டி. வி. கிருஷ்ணமூர்த்தி, அகில இந்திய ரேடியோ, திருச்சி; ஸ்ரீ டி. ஆர். வெங்கடராமன், திருத்துறைப்பூண்டி.

ஆக ரூ. 100 0 0

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| இதர வசூல்கள் | 26 | 0 | 0 |
| ஏற்கெனவே வசூல் | 10245 | 0 | 0 |
| ஆக மொத்தம் ரூ. | 15,082 | 0 | 0 |

# கல்யாணி

கி. ரா. கோபாலன்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

**வி**சுவநாதனிடமிருந்து ஏதாவதொரு பதில் வரும் என்று சாரதா எதிர்பார்த்தாள். வாரம் ஒன்றாகியது. இரண்டுமாகி விட்டது. எவ்விதமான பதிலும் வரவில்லை. கோயில் இனற்றுக்குப் போகும்பொழுது, சாயந்திரம் முன்னதாகவே கிளம்பி விசுவநாதனைப் பார்க்கலாம் என்ற ஆசையில் வடக்கு வீதியைச் சுற்றிக் கொண்டு போவாள். ஆனால் விசுவநாதன் அவள் கண்ணில்படாமலிருக்கப் பிரயத்தனப் பட்டான். நாளாக நாளாக சாரதா நம்பிக்கை முழுவதையும் இழந்து விட்டாள். மனமொடிந்து பித்துப் பிடித்தவள் போலானாள். உள்ளம் உருகி சோர்ந்து உடல் மெலிந்து வந்தாள்.

ஒரு நாள் கல்யாணி பள்ளிக்கூடம் போகும் பொழுது விசுவநாதன் அவள் கண்ணில் பட்டு விட்டான். இவ்வளவு நாளாக அவனைப் பார்க்காமல் அன்று பார்த்ததில் அவளுக்குத் துடிப்புத் தாங்கவில்லை. "மாப்பிள்ளை!" என்று நடு ரஸ்தாவிலேயே அவனைச் சத்தம் போட்டுக் கூப்பிட்டு விட்டாள். 'மாப்பிள்ளையாவது? இப்படிக் கூப்பிடுவதற்கு இப்பொழுது என்ன காரணமிருக்கிறது? அப்படிக் கூப்பிட்டது தவறு' என்று பிறகுதான் கல்யாணி உணர்ந்தாள். அதை அவள் வெகு சீக்கிரம் சமாளித்துக் கொண்டு "நீங்க ஏன் இப்பொழுதெல்லாம் வீட்டுக்கே வருவதில்லை?" என்றாள்.

"இல்லை......எனக்கு ஓய்வு இல்லை..." என்று தட்டுத் தடுமாறிக் கொண்டு ஏதோ சொன்னான்.

"எனக்குத் தெரியும். உங்கள் மனசுக்கும் அது தெரியும். எங்க அக்காவை நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் போங்கள். ஆனால் இவ்வளவு தூரம் பழகி விட்டு நீங்கள் வராமலிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை. என்னைப் பார்க்காமல் உங்களால் எப்படி இருக்க முடிகிறது? என்னால் முடியவில்லை. தினம் உங்களை நினைத்து விட்டால் எனக்குச் சாப்பாடு கூட வேண்டியிருக்காது......"

அவளுடைய தங்கு தடங்கலற்ற வார்த்தைகளையும், இனிய குரலையும் எத்தனையோ யுகங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் கேட்பது போலிருந்தது அவனுக்கு. தன்னுடைய அழகிய கண்களை அகல விரித்து அவனுடைய பதிலுக்காக அவனுடைய முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவளைக் கண்டதில் அவனுக்குத்தான் என்ன ஆனந்தம்! இதை அவளும் உணர்ந்தாள்.

"கல்யாணி, நாளைக்குச் சாயந்திரம் உங்கள் வீட்டுக்கு வருகிறேன்" என்றான்.

"கட்டாயம் வருகிறீர்களா?"

"நிச்சயம் வருவேன்—"

"நான் சாயந்திரம் உங்களை எதிர்பார்த்துக் கொண்டேயிருப்பேன்."

"சரி" என்று சொல்லிவிட்டு அவளைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே போனான்.

விசுவநாதன் நிச்சயம் வருவானென்றுதான் நம்பினாள் கல்யாணி. ஆனால் அவனது மனது மறுபடியும் அவர்கள் வீட்டுக்குப் போவதற்கு இடங் கொடுக்கவில்லையே! சாரதா அவனுக்குக் கடிதம் எழுதியதும், அதற்கு எவ்விதமான பதிலும் தான் கொடுக்காததுமே அவனை அங்கு போகவிடாமல் தடுத்தது. கல்யாணியின்மீது அவன் அளவற்ற பிரியம் வைத்திருந்தான். அவளைப் பார்க்க வேண்டுமென்று அவன் மனது துடித்துக் கொண்டுதான் இருந்தது. ஆனால் அவன் சாரதாவைக் கைவிட்டது அவன் மனச் சாட்சியையே குத்திக் காட்டியது. ஆனால் பாவம், கல்யாணி அவனை தினமும் எதிர்பார்த்து ஏமாந்தாள்.

ஒருநாள் தலைவலி என்று சொல்லிப் படுத்தாள் சாரதா. ஆனால் அவள் அந்தப் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவேயில்லை. மறுநாள் வீட்டுக்கு வரும் நாட்டு வைத்தியர் கையைப் பிடித்துப் பார்த்துவிட்டு சாதாரண சுரந்தான் என்று சொல்லி நான்கு பொட்டலம் சூரணம் கொடுத்து விட்டுப் போனார். ஆனால் அந்தச் சாதாரண சுரம் மூன்று நாள் அப்படியே இருந்து நான்காவது நாள் அவளது உயிரையே பலி வாங்கிக் கொண்டுபோய் விட்டது. அந்த வீடும் துக்கசாகரத்தில் மூழ்கியது.

குடும்பத்திலுள்ளவர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் அந்தப் பெண் திடீரென்று ஏதோ சாதாரண சுரத்தில் இறந்து விட்டாள் என்றுதான் தெரியும். ஆனால்

சார்தானா அவளைக் கொன்றது?—பாவம், அது அந்தப் பேதைப் பெண்ணுக்கு மாத்திரந்தான் தெரியும். அந்த அடக்கமான பெண் தன் ஆழமான உள்ளத்தில் வாழ்க்கையில் கைநழுவிப் போன ஒரு ஆசையை-ஏமாற்றத்தை எண்ணித் தன்னைத்தானே கொஞ்சம் கொஞ்சமாக மாய்த்துக் கொண்டாளென்பது அவளைத் தவிர யாருக்குமே தெரியாது.

*　*　*

அடுத்த வருஷம் கல்யாணிக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டுமென்ற பேச்சு எழுந்தது. அப்பொழுது விசுவநாதனைப் பற்றிய எண்ணமே அந்தக் குடும்பத்தில் எழவில்லை. ஆனால் கல்யாணியின் மனதில் விசுவநாதனின் உருவந்தான் ஆழமாகப் பதிந்திருந்தது.

ஒருநாள் வக்கீல் ராமச்சந்திரய்யர் சிவராமய்யர் வீட்டுக்கு வந்தார். சிவராமய்யர் அவரை முகமலர்ச்சியோடு வரவேற்றார். அவர்கள் ஏதேதோ உலக விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். பேச்சினிடையே ராமச்சந்திரய்யர், "சிவராமய்யர்வாள்! உங்கள் கல்யாணிக்கு ஏதாவது வரன் பார்த்துவிட்டீர்களா?" என்று கேட்டார்.

"பார்க்காமல் என்ன செய்வது? ஏதோ ஒன்று தங்கியிருக்கிறது. அந்த ஒன்றையும் கண்ணுக்கருத்துமாகப் பார்த்து ஒரு நல்ல இடத்திலே கொடுத்தால்தானே மனதிற்கு ஒரு நிம்மதியும் சந்தோஷமும் ஏற்படும்?"

ராமச்சந்திர அய்யர் "ஆமாம்! அதிலே என்ன சந்தேகம்?" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டு விட்டு "நான் உங்களை வெட்கத்தை விட்டு ஒன்று கேட்கிறேன் — நீங்கள் சம்மதிக்கணும் — உங்களுக்கு இப்போது இருப்பது ஒரே பெண் தான் — அதே போலத் தான் எனக்கும் கண்ணுக்குக் கண்ணாய் ஒரு பிள்ளை. நமக்கெல்லாம் வயசாகி விட்டது, குழந்தைகளின் சந்தோஷத்திற்குக் குறுக்கே நிற்கவேண்டாம். இப்போதெல்லாம் நான் கூட அவ்வளவு கோபம்—பிடிவாத மெல்லாம் வைத்துக் கொள்வதில்லை. எப்படியாவது அவன் சந்தோஷமாயிருந்தால் சரிதான்னு விட்டுட்டேன்......"

"ஆமாம்! அப்படித்தானிருக்கணும்..."

"அவன் உங்கள் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்னு ஒரேயடியாக நிற்கிறான். நான் வெட்கத்தை விட்டு உங்களைக் கேட்கிறேன், என் பிள்ளை க்ஷேமமாயிருக்கணுமே என்று — கல்யாணியை நீங்கள் அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்துத்தானாக வேண்டும்..."

சிவராமய்யர் "கல்யாணியையா......?" என்று ஆச்சரியத்துடன் கேட்டுவிட்டு யோசனையில் ஆழ்ந்தார்.

"என்ன யோசிக்கிறேள்? வரதக்ஷணை மற்றதெல்லாம் உங்கள் இஷ்டத்துக்குச்



# காரணம் என்ன?



சங்கீத வித்வான்:—ஏன் இப்படி எல்லாரும் ஓட்டம் பிடிக்கிறார்கள்?

கிழவர்:—எவனோ ஒருவன் ஒரு வீடு எங்கேயோ காலியாயிருக்கிறது என்று புரளி கிளப்பிவிட்டு விட்டான். அதுதான் காரணமாயிருக்கவேண்டும்! நீங்கள் பாடுங்கள்!

---

செய்யுங்கள். எனக்கு இப்போதெல்லாம் பணங்காசு விஷயத்திலேயே பற்றுதல் விட்டுப் போச்சு. முதற் பெண்ணிற்குச் சகுனத் தடைபோல தட்டின இடமாச்சேன்னு யோசிக்கிறீர்களா?"

"அதெல்லாமில்லை...... பெண் மனசு எப்படியோ?"

"எனக்குத் தெரியும். அதைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம். நம்ம பையனே சொன்னான். அவளுக்கும் அவனைக் கலியாணம் செய்துக்கிறதிலே ஆசைதான்னு."

"சரி, அப்படியே செய்துவிடுவோம்" என்றார் சிவராமய்யர்.

மறுநாள் கல்யாணி இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டாள். அவளுடைய ஆனந்தத்திற்கு ஒரு வரம்பில்லாமலிருந்தது. நெடுநாட்களாக அந்த வீட்டில் இல்லாத கலகலப்பான பேச்சும் சிரிப்பும் விளையாட்டும் மறுபடியும் தோன்றி வீட்டைச் சோபிதமாக்கின. விசுவநாதனுக்கும் மறுபடியும் சிவராமய்யர் வீட்டை நாடி அடிக்கடி வருவதற்கு தைரியம் பிறந்தது.

* * *

ஒருநாள் கைதவறிப்போன பின்னல் ஊசியைத் தேடுவதற்காக வீட்டிலுள்ள பெட்டிகளையெல்லாம் குடைந்துகொண்டிருந்தாள் கல்யாணி. அது அகப்படவில்லை; திடீரென்று சாரதாவின் பெட்டியில் ஒரு ஊசி இருப்பது அவள் ஞாபகத்துக்கு வந்தது. அவளுக்கு இருந்த அவசரத்திலும் பதற்றத்திலும் சாவியைக் கொண்டு பூட்டைத் திறக்கவேண்டும் என்பதைக் கூட அலக்ஷியம் செய்து பெட்டியின் பூட்டை பலமாக இழுத்தாள். பூட்டு 'பட்' டெனத் தெறித்தது. அவசர அவசரமாகப் பெட்டியைத் திறந்தாள். 'எம்பிராய்டரி' வேலை செய்த மேஜை விரிப்பு—ஜன்னலை மறைக்கும் துணி, கைக்குட்டை பின்னல் சவுக்கம் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்தாள். வர்ண நூல்களினால் ஒவ்வொன்றிலும் அழகான பூ வேலைகள் செய்யப்பட்டிருந்தன. ஆனால் அவளைத் திடுக்கிடச் செய்து மனதைச் சங்கடப்படச் செய்தது ஒரு விஷயம். ஒவ்வொன்றிலும் வர்ண நூலினால் சிறிய எழுத்தில் 'விசுவநாதன்-சாரதா' என்று அழகாக எழுதப்பட்டிருந்தது. 'சாரதாவுக்குத்தான் எவ்வளவு திடமான ஆசை; அழுத்தமான நம்பிக்கை! விசுவநாதன் இப்படித் திடீரென்று விவாகம் செய்துகொள்ள மாட்டேனென்று சொல்லுவானென்று நினைக்க என்ன ஆதாரமிருந்தது? உண்மையில் அக்கா மனமொடிந்துதான் இறந்துபோய் விட்டாள்......' இப்படி நினைத்தது கல்யாணியின் மனது. கண்களிலிருந்து கண்ணீர் பெருக கைகளிலிருந்த துணிகளை மார்போடு அணைத்துக்கொண்டு சிலைபோல் உட்கார்ந்திருந்தாள்.

நெடுநேரம் சென்ற பிறகு கல்யாணி ஒரு பெருமூச்சுடன் கையிலிருந்த துணிகளைக் கீழே வைத்துவிட்டு மறுபடியும் பெட்டியைச் சோதிக்கலானாள். பெட்டிக்கடியில் கடைசியில் ஒரு கத்தைக் கடிதங்கள் இருந்தன. கல்யாணி அதை எடுத்துப் பார்த்தாள். ஏதோ பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறாள். என்ன கடிதம்? யாருக்கு எழுதியிருக்கிறாள்? கல்யாணி பதற்றத்தோடு படித்தாள். "என் அன்பிற்குரிய .........க்கு சாரதா அநேக நமஸ்காரம் செய்து எழுதிக் கொண்டது......"

விசுவநாதனுக்கல்லவா எழுதியிருக்கிறாள்! அந்தக் கடிதத்தைப் பிடித்திருந்த கல்யாணியின் கைகள் நடுங்கின. அப்பொழுதுதான் கண்ணீர் வற்றி உலர்ந்திருந்த அவளுடைய கண்களில் மறுபடியும் நீர் நிறைந்தது.

சாமான்களையெல்லாம் அள்ளிப் பெட்டியில் போட்டுவிட்டு அந்தக் கடிதத்தை மாத்திரம் மறைவாக மடியில் வைத்துக் கொண்டு மாடி அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டு உட்கார்ந்து படிக்கலானான்.

ஊமைச்சி போலிருந்த சாரதாவின் உள்ளடங்கிய எண்ணங்களை அக் கடிதத்தில் உள்ள ஒவ்வொரு வார்த்தையும் உயிராக்கிக் காட்டின. அந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க சாரதாவே தன் எதிரில் வந்து நின்று பேசுவதுபோலிருந்தது கல்யாணிக்கு. அப்படி என்ன எழுதியிருந்தாள்? விசுவநாதனின் ஹிருதயத்தை இளக வைக்கத்தான் அவள் ஒவ்வொரு வார்த்தையையும் எழுத்தையும் எழுதியிருந்தாள். அந்த ஒரே நினைவில்தான் இருபது பக்கங்களையும் ஏதேதோ எழுதி நிரப்பியிருந்தாள் என்பது தெளிவாக விளங்கியது.

அந்தக் கடிதத்தின் கடைசி இரண்டு பக்கங்கள்தான் கல்யாணியின் மனதை மிகவும் உலுக்கிவிட்டன. ஏனென்றால் அது அவனைப் பொருத்ததாயிருந்தது. அதுவே சாரதா கடைசியாக விசுவநாதனுக்கு விடுக்கும் வேண்டுகோளாகவும் இருந்தது.

"......எனக்குத் தெரியும்—நான் கல்யாணியைவிட அழகியல்ல என்று. என் பக்கத்தில் கல்யாணியை வைத்துப் பார்த்தால் என்னை யாரும் விரும்புவதற்கு நியாயமில்லை. உங்களுக்குப் பக்கத்தில் கல்யாணி வந்து நின்றால்தான் 'ரொம்பப் பொருத்தமான தம்பதிகள்' என்று உலகம் சொல்லும். ஏன், நான் கூடச் சொல்லுவேன். தவிர உங்களுக்கு அவன்மீது அளவற்ற ஆசை; அதையும் நான் தெரிந்து கொள்ளாமலில்லை. ஒரு நாள் நீங்களே அவனிடம் சொன்னீர்கள். சமையலறைக் கதவோரத்தில் நின்று கொண்டிருந்த என் காதிலும் அவைகள் விழுந்தன. 'கல்யாணி! உன்னை ஒரு நாள் வந்து பார்க்காவிட்டால் எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும்போலிருக்கிறது' என்று சொன்னீர்கள். அன்றைய தினத்திலிருந்து நீங்கள் என்னைப் பார்க்கத்தான் என் வீட்டிற்கு வருகிறீர்கள் என்ற எண்ணத்தை விட்டுவிட்டேன். ஆனால் அதோடு என் ஆசையும்—நம்பிக்கையும் அழிந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் என் ஹிருதயம் எதிலும் சமாதானத்தையே நாடியது. நீங்கள் என்னைப் பார்க்க வராவிட்டாலும் ஒரு நாளாவது உங்களைப் பார்க்காவிட்டால் என் மனது சமாதானமடையாது போலிருந்தது. கல்யாணியைப் பார்க்கும் உத்தேசத்திலாவது நீங்கள் இங்கே வருகிறீர்களே. அது போதும் என்றிருந்தேன். கல்யாணிக்கும் உங்கள் மீது அளவற்ற ஆசை இருக்கிறது. ஒரு நாள் அவன் என்னிடம், 'அக்கா, நீ ரொம்ப அதிருஷ்டக்காரி!......போல் அகமுடையான் கிடைப்பதென்றால் கோடித்தவம் செய்திருக்கத்தான் வேண்டும். சிரித்துச் சிரித்து இப்படி வேடிக்கையாய்ப் பேசுகிறவரோடு எவ்வளவு கஷ்டமிருந்தாலும் சமாளித்துக்கொண்டு குடித்தனம் செய்துவிடலாம் அக்கா! இவரைப் போல் இன்னொரு புருஷனைப் பார்க்கவே முடியாது. எனக்கு எந்தக் கோமாளி வருகிறதோ? அது எப்படியிருக்குமோ? அழகாய் இருந்தாலென்ன? அவலட்சணமாய் இருந்தாலென்ன? எல்லாவற்றிற்கும் கொடுத்துவைக்க வேண்டாமா?' என்றான். அடக்கமாட்டாத ஏக்கத்தோடு — 'கல்யாணி! நீதான் இவரைக் கல்யாணம் செய்துகொண்டுவிடேன்' என்றேன் நான் சிரித்துக்கொண்டே. அப்பொழுது பார்க்க வேண்டுமே அவன் முகமலர்ச்சியை! 'அக்கா! நீ இதை உன் அந்தரங்கத்தோடு சொல்லவில்லை. எனக்குத் தெரியும்' என்றான். நான் அவனை அத்துடன் விடவில்லை. 'கல்யாணி! பெண்கள்தான் இரண்டு புருஷர்களைக் கல்யாணம் செய்து கொள்ளக்கூடாது. புருஷர்கள் எவ்வளவு பெண்களை வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளலாமே. ஏன் நாம் இரண்டு பேருமே அவருக்கு வாழ்க்கைப் படக் கூடாது? வள்ளி—தேவானையைப்போல்' என்றேன். 'பாவம்! அந்த நல்ல மனுஷனைப் படுத்திக் கொட்டணுங்கிறயா?' என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

"இதைவிட எனக்குவேறு என்ன வேண்டும், கல்யாணி உங்களையே எண்ணி உருகுகிறான் என்பதற்கு? அவனைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பரிதாபமாகவும் இரக்கமாகவும் இருக்கிறது. நான் கடைசியாக உங்களை வேண்டிக் கொள்கிறேன். எங்கள் இரண்டு பேரையுமே நீங்கள் கல்யாணம் செய்துகொண்டு விடுங்கள். என்னுடைய அடங்காத ஆசை உங்களுக்கு மனைவியாகிக் குடும்ப பாரத்தை ஏற்றுப் பதிசிச்ருஷை செய்ய வேண்டுமென்பதுதான். அவனுடைய ஆசை சதா ஆடிப்பாடி உங்களோடு வேடிக்கையாகப் பேசி உங்களுக்கு இன்பத்தைக் கொடுக்க வேண்டுமென்பது

எண்ணி எண்ணித் திட்டம்போட் டெழுதி னானோ!
எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டினானோ!
புண்ணியத்தால் உடன்பிறந்த புலமை தானோ!
போந்தபின்பு ஆய்ந்தறிந்து புகன்ற தாமோ!!
தண்ணியல்சேர் தமிழணங்கின் தவமே தானோ!
தயாதனும் சனகனுமே தரித்த நோன்போ!
விண்ணமுதின் சுவைகெடுத்த கம்பன் பாடல்
விரிந்தவிதம் என்றென்றும் வியப்பே ஆகும்.

— நாமக்கல் கவிஞர்.

தான். இவை இரண்டும் உங்களுக்கு வேண்டியவைதானே? கல்யாணி உங்கள் ஹிருதயத்தின் அழகு ராணியாயிருக்கட்டும். நான் உங்களுக்குப் பதி சேவை செய்யும் ஊழியக்காரியாய் இருக்கிறேன். நான் உங்களையே புருஷனாக எண்ணி விட்டேன். என் மனது உங்களைத் தவிர வேறு ஒருவரையும் நினைக்காது. நீங்கள் துளிக்கூட சித்த மிரங்காமல் உதறிவிட்டால் நான் இப்படியே உள்ளமுடைந்து — உருக்குலைந்து ......?"

கல்யாணியால் அந்தக் கடிதத்தை அதற்கு மேல் படிக்கவே முடியவில்லை. கையில் அந்தக் கடிதத்துடன் மண்டியிட்டுக் குப்புறப்படுத்து விக்கி விக்கி அழுதாள்.

இந்தக் கடிதத்தைப் படித்ததும் யாருக்கும் மனது இளகும். அன்பொழுக, வார்த்தையில் தேனைக்குழைத்துப் பேசுகிறாரே விசுவநாதன் இந்தக் கடிதத்தைப் படித்து விட்டா கல்லாயிருந்தார்......? இவ்வளவு கல் நெஞ்சமுள்ளவரையா நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்? ஹூ ஹூம்! எனக்குக் குருபியாய் ஒரு புருஷன் கிடைத்தாலும் பாதகமில்லை. இப்படிப்பட்ட கொடிய சித்தமுள்ள புருஷன் மன்மதனாயிருந்தாலும் வேண்டாம்.

மறுநாள் வீட்டில் ஒரே குழப்பம்! சிவராமய்யருக்கும் அவர் மனைவிக்கும் கல்யாணி திடீரென்று செய்த முடிவு வியப்பாகவேயிருந்தது.

அன்று சாயந்திரம் விசுவநாதன் வந்தான். என்றும் போல் அவனை முகமலர்ச்சியோடு வரவேற்பதற்கு வீட்டுத் தாழ்வாரத்தில் கல்யாணி இல்லை. அவள் மாடியிலிருப்பாள் என்று எண்ணிச் 'சட சட' வென்று மாடிக்குப் போனான். அவள் மாடியின் வெளித் தாழ்வாரத்திலிருந்த கைப்பிடிச் சுவரில் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்து எதையோ ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தாள்.

"கல்யாணி!" என்ற குரலைக் கேட்டதுந்தான் சுயப் பிரக்ஞை வந்தவள் போல் தலை நிமிர்ந்து பார்த்தாள். எப்பொழுதும் போல அவள் முகத்தில் மலர்ச்சி யில்லை. அவளுடைய பார்வையில் ஒரு குதூகலமில்லை. "கல்யாணி! உனக்கு உடம்பு சரியில்லையா?" என்றான் விசுவநாதன்.

"உடம்பு சரியாகத்தா னிருக்கிறது. மனதுதான் சரியில்லை" என்றாள். அவள் கண்களிலிருந்த வெறுப்பும் கசப்பும் வார்த்தைகளிலு மிருந்தன.

"மனது சரியில்லையா?..." விசுவநாதன் ஒன்றும் புரிந்து கொள்ளாதவனாகத் திணறினான். "ஆமாம்; இனிமேல் நீங்கள் இங்கே வராதீர்கள்" என்று அவள் நெஞ்சில் தைக்க மடைக்கச் சொன்னாள்.

"கல்யாணி! நீ சொல்லுகிறது ஒன்றும் எனக்குப் புரிய வில்லையே......" என்று துடித்துக் கொண்டே சொன்னான் விசுவநாதன். அவள் வெடுக்கென்று திரும்பி அவனைப் பார்த்தாள். அவளுடைய கண்கள் சிவந்திருந்தன.

"ஒன்றும் புரியவில்லையா? உங்களுக்கு ஒன்றும் புரியாதுதான். ஒருவேளை அக்காவினுடைய ஆவி உங்கள் எதிரில் வந்து நின்று சொன்னால் ஒரு வேளை புரியும்..."

"அக்காவின் ஆவியா?"

"ஆமாம்! அவளை நீங்கள் தானே கொன்றீர்கள்......"

"நான் கொன்றேனா......?" எதிர் பாராது விழுந்த அடியைத் தாங்கமாட்டாது துடிப்பாய்த் துடித்தான் விசுவநாதன்.

"உங்கள் கல்நெஞ்சம் துளியாவது இரங்கியிருந்தால் அவள் இறந்துபோவாளா? அவள் எழுதிய கடிதத்தில் இரண்டு பக்கம் படித்திருந்தால் கூடப் போதுமே, கல்லைகூடக் கரைந்திருக்குமே......"

"கடிதமா?"

"ஆமாம், உங்களுக்கு அவள் கடிதமே எழுதவில்லையா?"

"ஆமாம்! எப்பொழுதோ அவள் ஒரு கடிதத்தை எழுதி என்னிடம் கொண்டு வந்து கொடுத்தாள். கல்யாணி, நான் அந்தக் கடிதத்தில் ஒரு பக்கங்கூடச் சரியாய்ப் படிக்கவில்லை......"

"ஒரு பக்கங்கூடப் படிக்கவில்லையா? ஒரு பெண்ணென்றால் அவ்வளவு அலக்ஷியமா! நான் உங்களுக்கு வாழ்க்கைப் பட்டால் அக்காவிற்கே, இந்தக் குடும்பத்திற்கே பெரிய துரோகம் செய்தது போலாகும். அக்காவின் ஆவி என்னை எப்பொழுதும் சபித்துக் கொண்டேயிருக்கும். போதும் நம்முடைய ஸிநேகிதம்! நீங்கள் இனிமேல் இங்கே வராதீர்கள்...என்னை அடியோடு மறந்து விடுங்கள், தயவுசெய்து போய் விடுங்கள்" என்று கூறிவிட்டு அவள் சட்டென்று அடுத்த அறையில் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

விசுவநாதன் சிறிது நேரம் கற்சிலை போல அந்த இடத்திலேயே ஸ்தம்பித்து நின்றான். உள்ளேயிருந்து கல்யாணி விக்கி விக்கி அழுவது அவன் காதில் விழுந்தது. அவன் பித்துப் பிடித்தவன் போல் மாடிப் படிகளை ஒவ்வொன்றாக எண்ணுவது போல் தலை குனிந்தபடிக் கீழே இறங்கி வந்தான்.

* * *

ராமச்சந்திரய்யர் ஊரில் ஒரு பிரபலமான வக்கீல். அப்படிப் பட்டவர் தம் பிள்ளைக்காகக் கேவலம் ஒரு முனிசிபல் ஆபீஸ் குமாஸ்தாவின் பெண்ணைக் கொடுக்கும்படிக் கெஞ்சுவது எவ்வளவு மதிப்புக் குறைவான காரியம்? கல்யாணப் பேச்சு முறிந்ததும் தன் பிள்ளையைக் கூப்பிட்டு ஏதேதோ புத்திமதிகளைச் சொல்லிவிட்டுக் கௌரவமாக இருந்து விட்டார்.

கல்யாணியின் திரஸ்காரம் விசுவநாதனை வாழ்க்கையில் கசப்புள்ளவனாக்கி விட்டது. அதோடு மட்டுமல்ல; அவன் நெடுநாட்களுக்குப் பிறகு தன் பெட்டியில் கிடந்த சாரதாவின் கடிதத்தை வேறு தேடி எடுத்துப் படித்து விட்டான். "நான் துரோகி தான்; கல்நெஞ்சம் படைத்தவன்தான்" என்று அடிக்கடி தனக்குள் சொல்லிக் கொள்ளுவான். சாரதா அழகாயில்லாவிட்டாலும் அவளது அடக்கமும் பொறுமையும் எவ்வளவு உயர்ந்தது; அவளுடைய குணமும் புத்திசாலித்தனமும் எவ்வளவு உயர்ந்தது என்பதையெல்லாம் அப்பொழுது தான் அவன் கொஞ்சங் கொஞ்சமாக உணர முடிந்தது.

அவன் வேறு கல்யாணம் செய்துகொள்ள மறுத்ததும் அவனுடைய பெற்றோர்களை மிகவும் சஞ்சலத்திற்குள்ளாக்கியது. அனேகமாக அவனைப் பைத்தியம் பிடித்தவனென்றே எல்லோரும் சொல்லி வந்தார்கள்.

கல்யாணியால் விசுவநாதனை அடியோடு மறந்துவிட முடியவில்லை. அவனைத் திரஸ்கரித்ததினால் அவளுடைய மனதில் அமைதி ஏற்பட்டு விடவில்லை. அவளுடைய மனப்

## கவிஞர் மகன் கல்யாணம்

நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம்பிள்ளை அவர்களின் மூத்த குமாரன் சிரஞ்சீவி அமிர்தலிங்கத்துக்கும், கோயமுத்தூர் ஸ்ரீ கே. அ. லட்சுமணக் கவுண்டர் அவர்களின் மூத்த புதல்வி சௌபாக்யவதி அலர்மேலுவுக்கும் 9-9-48 யன்று கோவையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. 13-ம் தேதி யன்று நாமக்கல்லில் மணமக்களுக்கு பெரிய வரவேற்பு வைபவம் நடைபெற்றது. கவர்னர் ஜெனரல் ராஜாஜீ, சென்னைப் பிரதமர் முதலிய பெரியார்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள். கோவையிலும் நாமக்கல்லிலும் தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் தமிழன்பர்கள் பலர் வந்து கூடியிருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க, அலர்மேலு — அமிர்தலிங்கம்!



போராட்டம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டுதான் வந்தது.

புரட்டாசி மாதம்; நவராத்திரிநாள். திடீரென்று பிடித்த மழை ஆவேசமாகத்தான் அடித்துக் கொண்டிருந்தது. விசுவநாதன் அந்த மழையையும் லக்ஷியம் செய்யாமல் அந்தத் தெரு வழியாக நடந்து வந்து கொண்டிருந்தான்.

வீட்டுத் திண்ணையில் தூணில் சாய்ந்தபடியே, எங்கோ நினைவாக நின்று கொண்டிருந்தாள் கல்யாணி. அவளுடைய தகப்பனார் இன்னும் ஆபீஸிலிருந்து வரவில்லை. அவளுடைய தாயார் ஆசாரியாள் மடத்தில் நடக்கும் தேவி பாகவத உபந்நியாசம் கேட்கப் போயிருந்தாள். திடீரென்று அவள் கண்ணெதிரில் யாரோ நிற்பது போலிருந்தது. அவள் ஆச்சரியத்துடன் பார்த்தாள். விசுவநாதன்!

அவன் அலக்ஷியமாகச் சிரித்துக் கொண்டே, "இவ்வளவு தூரம் எப்படியோ மழையில் நனைந்துகொண்டு வந்து விட்டேன்; இப்பொழுதுதான் எனக்குத் தோன்றியது எங்கேயாவது கொஞ்சம் ஒதுங்கலாமே யென்று" என்று சொல்லி விட்டு மறுபடியும் ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

கல்யாணி மின்சார சக்தியால் தாக்குண்டவள்போலானாள். அவன் எவ்வளவு மாறி விட்டான்? முன்பிருந்த விசுவநாதன் தானா அவன்? அவனது கண்கள் குழிவிழுந்து மிரண்டு மிரண்டு விழிப்பது பயங்கரமாயிருந்தது. மினுமினுவென்று இளமையும் அழகும் பொருந்தி நின்ற அவனுடைய மேனி எப்படி இளைத்து, கருத்து......கல்யாணிக்கு அவனைப் பார்க்கவே நடுக்கமாய் இருந்தது. அவள் துக்கமும் பயமும் நிறைந்த குரலில், "உள்ளே வாருங்கள். சொட்டச் சொட்ட ஈரத்தோடு நிற்கிறீர்களே, சட்டை வேஷ்டியைப் பிழிந்தாவது உடுத்திக் கொள்ளலாம்" என்றாள்.

"அதற்கென்ன தாராளமாய்ப் பிழிந்து உடுத்திக் கொள்கிறேன். ஆனால் பிழிந்து உடுத்திக் கொண்டாலும் ஈரமாய் உடுத்திக் கொண்டாலும் ஒன்றுதான். எல்லா ஜீவனுக்கும் உடலில் ஈரம் பட்டவுடனே உள்ளத்திலும் ஈரம் படும் என்று நினைத்து விடாதே..." என்று சொல்லிக் கொண்டே அவளோடு உள்ளே போனான் விசுவநாதன்.

உள்ளே சென்ற கல்யாணி சிறிது நேரத்திற்கெல்லாம் கையில் ஒரு டம்ளர் காப்பியுடன் தாழ்வாரத்திற்கு வந்தாள். "கொஞ்சம், காப்பி சாப்பிடுங்கள்" என்று சொல்லி அவன் பக்கத்தில் டம்ளரை வைத்தாள்.

"காப்பியா? ரொம்ப சரி; குடிக்கிறேன். இதோ பார், காப்பி வேண்டியதுதான். ஆனால் மனிதன் உயிர் தரிக்க இதைப்போல இன்னும் எவ்வளவோ வேண்டியிருக்கிறது, தெரியுமா?" என்றான்.

அவன் காப்பியைச் சாப்பிட்டு விட்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்தான். கல்யாணி அவனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் மனந் தாளாத துக்கத்தோடு.

"மழை நின்றுவிட்டது போலிருக்கிறதே? நான் போக வேண்டும். ஆனால் இதை முதலில் தெரிந்து கொள், கல்யாணி: மனிதன் ஒரோர் சமயம் தானாகப் பிழை செய்வதேயில்லை. தெய்வமே அவனைப் பிழையுள்ளவனாக்கி விடுகிறது. 'என்னைக் கல்யாணம் செய்து கொள்'ளென்று இனிமேல் உன்னை நான் கெஞ்சவே மாட்டேன். நான் அவ்வளவு பலஹீனமானவனல்ல. கருங்கல் உருகவில்லையே என்று வருத்தப்படுவது புத்திசாலித்தனமல்ல. ஆனால் பனிக்கட்டியாய் இருந்து கருங் கல்லாகிவிடக் கூடாது. நான் சாரதாவிற்கு எவ்வளவு துரோகம் செய்து விட்டேன்! நீ சொல்லியதுபோல் நான் கொலை பாதகன் — புத்தியில்லாதவனுங் கூட...... இதோ பார், இப்படியே கொஞ்சம கொஞ்சமாக நாளைக் கடத்திக்கொண்டு வந்து, எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் சாரதாவிடம் போய்விடப் போகிறேன். அவள் மிகவும் நல்லவள்... சரி! நாழிகை யாகிறது. மழை விட்டிருக்கிறது. அப்புறம் எப்பொழுதாவது முடிந்தால் உன்னைப் பார்க்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே கிளம்பினான்.

கல்யாணி அவன் எதிரில் போய் நின்று அவனது தோளைப் பிடித்து உலுக்கியபடியே, "இதோ பாருங்கள்; நான் உங்களையே கல்யாணம் செய்து கொள்கிறேன். நான் முன்போல் கல்யாணியல்ல; இப்பொழுது சாரதாவாக மாறி விட்டேன். என்னைக் கைவிட்டு விடாதீர்கள்!" என்றாள்.

"எனக்குத் தெரியும். நீ குணத்தில் தான் சாரதாவாக மாறிவிட்டாய். ஆனால் உருவத்தில் — அழகில் — அதே கல்யாணி தான். எப்படியிருந்தாலென்ன? எனக்குச் சாரதாவும் வேண்டும்; கல்யாணியும் வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே ஈரமாயிருந்த தன் மேல் துண்டினால் அவள் கண்ணீரைத் துடைத்தான் விசுவநாதன்.

கடிது இலங்கைக் கடிதம் :

# காந்திஜியும் இலங்கையும்

ரஜனி

மகாத்மா காந்தியின் ஜயந்தி விழாவை வழக்கத்தைவிட இவ்வருடம் அதிகச் சிறப்புடன் கொண்டாட இலங்கையில் ஏற்பாடுகள் நடந்துள்ளன. இலங்கை இந்தியர் பிரஜாவுரிமைப் பிரச்னைகளைப் பற்றி இரு தேசத் தலைவர்களுக்குமிடையில் எவ்வித மாறுபாடுகள் இருந்த பொழுதிலும், அஹிம்சா மூர்த்தியான புத்த பகவானை வழிபடும் சிங்களவர்கள் மகாத்மா காந்தியடிகளை புத்தரின் அவதாரமென்றே கருதுகிறார்கள்.

இலங்கையிடத்தில் மகாத்மா காந்திக்கு எப்பொழுதுமே ஒரு தனி வாஞ்சையுண்டு. இந்தியாவைத் தாயாகவும் இலங்கையை மகனாகவும் வர்ணித்து இரு தேசத் தகராறுகளையும் தாய்க்கும் சேய்க்கும் ஏற்படும் அற்பமான குடும்பச் சச்சரவுகள் என்று அவர் அடிக்கடி சொல்லிவந்தார். இலங்கை இந்திய காங்கிரஸ் தூதுகோஷ்டி சென்ற வருடம் கடைசியாகக் காந்திஜியைக் கண்டு பேசியபொழுது, “நியாயமும் தர்மமும் நிச்சயமாக வெற்றிபெறும். நீங்கள் நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். இலங்கையர்களும் உங்களிடம் நியாயமாக நடப்பார்கள்” என்று சொன்னார். இலங்கை இந்தியர்களுக்குச் சேவா கிராம முனிவர் செய்த கடைசி உபதேசம் இதுதான்.

1929-ம் ஆண்டில் மகாத்மாஜி இப்பொழுது கவர்னர் ஜெனரலாயிருக்கும் ராஜாஜியுடன் இலங்கைக்கு விஜயம் செய்தார். அகில இலங்கையுமே திரண்டு வந்து அவரை வரவேற்றது. அந்தச் சம்பவத்தை இலங்கையர்கள் அடிக்கடி இன்னும் ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

## மனித நீதியை மறக்காதீர்

இந்தியர் பிரஜாவுரிமை மசோதாவின் ஷரத்துகள் இப்பொழுது திட்டமாகத் தெரிந்து விட்டன. அவைகளை அழுத்தமாகக் கண்டித்து, சாதாரண மனித நீதியை மறக்காமலிருக்கும்படி சேனநாயகா அரசாங்கத்தை வற்புறுத்த இலங்கை இந்தியர்களின் பிரம்மாண்டமான கூட்டமொன்று டவுன் ஹாலில் நடந்தது. மசோதாவில் கண்ட அநியாயமான ஷரத்துகளை இ. இ. கா. தலைவர் ஜனாப் அஸீஸ் விளக்கிக் கூறினார்.

ஹைதராபாத் போராட்டம் வெற்றிகரமாக முடிந்ததானது இலங்கையில் இந்தியாவின் செல்வாக்கைப் பல மடங்கு அதிகரித்திருக்கிறது. இந்தியாவுக்குப் பல “தலைவலிகள்” இருந்ததால் தான் ஸ்ரீ சேனநாயகா தம் இஷ்டப்படி பிரஜாவுரிமை மசோதாவைத் தயாரித்தார் என்றும், இந்தியாவின் இன்றைய மாறுபட்ட நிலைமையில் டில்லி அரசாங்கம் ஓரளவு மனவுறுதியைக் காட்டுமானால் ஸ்ரீ சேனநாயகா கோஷ்டியாரிடையே மனமாற்றம் ஏற்படுமென்றும் இந்திய வட்டாரங்களில் அபிப்பிராயம் நிலவுகிறது.

எப்படியும் ஸ்ரீ சேனநாயகா சாம்ராஜ்யப் பிரதம மந்திரிகள் மகாநாட்டுக்குச் சென்று திரும்பும் வரை இந்தியர் பிரஜாவுரிமை மசோதா பார்லிமெண்டுக்கு வருவதற்கில்லை. அதில் திருத்தம் செய்ய இன்னமும் அவகாசமிருக்கிறது.

## துக்ககரமான நிலைமை

இலங்கை பிரஜா உரிமை மசோதாவும் குடியேற்றத்தடை மசோதாவும் செனேட் சபையிலும் நிறைவேறிவிட்டன. இனி கவர்னர் ஜெனரல் கையெழுத்தாகி கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டுச் சட்டங்களாகப் பிரகடனம் செய்யப்படுவதுதான் பாக்கி. சம உரிமைகள் அளிப்பதாக வாக்களித்து ஆசை வார்த்தைகள் சொல்லி அழைத்து வந்த இந்தியர்களை இப்பொழுது விரட்டுவது அக்கிரமம், அநீதி, கொடுமை என்று செனேட் சபையிலும் பலர் இடித்துக்

காட்டினார்கள். புதிய தொழிலாளரை அனுப்புவதில்லை யென்று 1939-ம் ஆண்டில் இந்திய அரசாங்கம் தடை விதித்த பின் கள்ளத்தனமாக தென்னிந்தியத் தொழிலாளர்களை இலங்கைக்குக் கடத்தி வரச்செய்த முயற்சிகளை யெல்லாம் ஒரு செனேட்டர் சுட்டிக் காட்டினர். "இப்படி களவாக அழைத்து வந்தவர்களை நாட்டைச் சுரண்ட வந்தவர்களென்று வர்ணிப்பது எப்படி நியாயமாகும்?" என்று கேட்டார் மற்றொருவர்.

இலங்கையில் இன்னொரு அக்கிரமமான நிலைமை உருவாகிக் கொண்டிருக்கிறது. இங்குள்ள முஸ்லிம்களுள் 100க்கு 99 பேர்கள் இந்திய யூனியன் பிரஜைகள். ஆனால் அவர்களுடைய விசுவாசமெல்லாம் பாகிஸ்தானிடத்தில். அதோடு அவர்களைச் சொல்லிலும் செயலிலும் இந்தியர்களாக இலங்கை அரசாங்கமும் நினைப்பதில்லை. இலங்கைச் சோனகர்களென்ற வகுப்பாருடன் இந்திய முஸ்லிம்களும் சேர்ந்து கொண்டு ஊர்த்து இந்தியர்களை விரட்டும் கைங்கர்யத்திலே அரசாங்கத்துக்கு உதவி புரிந்து வருகிறார்கள். முஸ்லிம் பார்லிமெண்டு அங்கத்தினர் களெல்லாம் இந்தியர்களை விரட்டும் மசோதாக்களை ஆதரித்து வோட்டுக் கொடுத்ததை நான் குறிப்பிட விரும்புகிறேன்.

### துறைமுக அநீதி வாபஸ்

துறை முகத்தில் வேலை செய்யும் இந்தியத் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்யும் உத்தரவைப் பொதுஜனக் கிளர்ச்சிக் கிணங்க மந்திரி வாபஸ் வாங்கி யிருக்கிறார். குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை யென்றமாதிரி இப்பொழுது ஸர் ஜான் கொத்தலாவல, "புதிய தொழிலாளரை வேலைக்கு அமர்த்தும் போது இலங்கையர்களைத்தான் அமர்த்த வேண்டுமென்று நாம் சொன்னதைத் துறைமுக கண்டிராக்டர்கள் தவறாக அர்த்தம் செய்துகொண்டு விட்டார்கள்" என்று கூறுகிறார். எப்படியோ, உத்தரவு வாபஸாகி விட்டது நல்லதுதான்!

# வட்ட மேஜை

மதுரை
8—9—48

★

## நெல்லில் கல் ஏன்?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

ரேஷன் அரிசியில் கல்லும் மண்ணும் இருக்கின்றன. அதற்குக் காரணம் பல. தாசில்தாரோ, ரெவினியூ இன்ஸ்பெக்டர்களோ அறுவடை காலத்தில் கொள்முதலுக்காக வயலுக்கு வருவார்கள். அவர்கள் பத்து, பதினைந்து நாட்கள் பிந்தி அறுவடை செய்ய வேண்டியதைப் பக்குவத்திற்கு முந்தியே அறுத்து, காய வைக்காமல் அப்படியே மூட்டைகளாக நிரப்பி விடுவார்கள். எடைக் கணக்கு ஆனதால் குடியானவர்களுக்கு உபரி அதிகம். பிறகு மூட்டைகளை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி விடுவார்கள். ரயில் வசதியோ, மோட்டார் வசதியோ சீக்கிரம் கிடைப்பதில்லை. மேலும், நெல்லைக் காயப் போடுவதுமில்லை. நெல் ஈரமானதாலும் மூட்டைகள் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைப்பதாலும் நெல் சப்பளித்துக் கறுப்படைகிறது. வெகு காலத்திற்குப் பிறகு, ரயில் வசதியோ லாரி வசதியோ கிடைத்து, ஏற்றுமதி செய்து நெல் குத்தும் மில்லுக்குப் போகிறது. அங்கும் காயப்போடாமல் நாற்றம் பிடித்த தண்ணீரில் பல நாட்கள் ஊறப்போடுகிறார்கள். பணம் பெறுவது எடையைப் பொறுத்திருப்பதால் நெல்லை ஒன்று இரண்டாக அரைத்து! மனதாரக் கல்மண் உருண்டைகளைச் சேர்த்து, மூட்டைகளாகக் கட்டி அனுப்பிவிடுகிறார்கள். அப்பொழுதும் அரிசியைக் காய வைப்பதில்லை.

இந்தக் கொடுமைகளாலும் கொள்முதல் செய்வதற்குப் பழக்க மில்லாதவர்களாலும், மக்கள் அரைச் சத்துள்ள அரிசியைச் சாப்பிட வேண்டியிருக்கிறது. இன்றைய நிலையில் மக்களின் உடல் நலம் பாதிக்கு மேல் குறைந்துவிட்டது. ஆகவே, சர்க்கார் செய்வதைச் சரியாகச் செய்யும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

டி. வி. தம்புசாமி.

மயிலாப்பூர்
4—9—48

## தபால் சேகரிக்க

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

கொழும்பு நகரத்தில் ஒவ்வொரு தபால்பெட்டிக்கும் சென்று தபால் சேகரிக்கும் வேலை "ராயல் மெயி"லுடையது. காலை ஆறு மணிக்கு ஓட ஆரம்பிக்கும் இந்த வண்டிகள் இரவு பாதி ராத்திரி வரையில் ஓடுகின்றன. இதனால் அன்றிரவு வரை எழுதும் கடிதங்கள் அன்றைய கட்டிலேயே சேர்ந்துவிடுகின்றன. "ராயல் மெயில்" வண்டியில் இரண்டே இரண்டு ஆட்கள் தான் வேலை செய்கிறார்கள். ஒருவன் வண்டி ஓட்டி. மற்றொருவன் தபால் கட்டுகளைச் சேகரித்து வண்டியில் போடுபவன். ஆனால் நம் ஊரிலோ தபால்காரன் வெய்யிலில் வதங்கி, பல தெருக்களைக் கடந்து, பல பெட்டிகளை நாடிச் சென்று கட்டுகளைச் சேகரித்து வரவேண்டியிருக்கிறது. இதனால் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் தபால்களை எடுக்கத் தபால்காரர்கள் தேவையாயிருக்கிறது. அதற்குப் பதிலாக நம் ஊரிலும் இந்த மாதிரி வண்டிகள் ஏற்படுத்தி விட்டால் வேலைகள் வெகு துரிதமாகவும், சுலபமாகவும் நடக்கும் அல்லவா? சர்க்கார் இதைக் கவனித்து ஆவன செய்வார்களா?

கரீமா.

மதுரை,
29—9—48

## பிலிம் தணிக்கை போர்டு கவனிக்குமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

பிலிம் கட்டுப்பாடு இல்லாததால் 22,000 25,000 அடி நீளமுள்ள தமிழ்ப் படங்கள் வெளி வருகின்றன. அதனால் சினிமா பார்க்கிறவர்களுடைய சுகாதாரத்திற்குக் கேடு விளைகிறது.

படங்களில் கதாநாயகன் மிகவும் மனம் நொந்து வருந்தும் நிலையில் விஸ்தாரமாக ராக ஆலாபனை செய்ய ஆரம்பிப்பது கொஞ்சமாவது பொருத்தமாயிருக்கிறதா? இந்த மாதிரி விஷயங்களில் படத்தயாரிப்பாளர்கள் ஆங்கிலப் படங்களைப் பார்த்துக் கற்றுக் கொண்டால் தேவலை.

மேல்நாட்டுப் படங்களில் உள்ள கெட்ட அம்சங்களை மாத்திரம் 'காபி'யடித்து விடுகிறார்கள். அந்நாட்டு மக்களிடையே காணப்படும் காலந்தவறாமை, சமுதாய உணர்ச்சி இவை போன்ற நல்ல குணங்களை விட்டு நமக்கு ஒவ்வாத பழக்க வழக்கங்களைக் கொள்வது தவறு.

'சென்ஸார் போர்டார்' தங்கள் கத்தரிக்கோலை வேண்டிய அளவுக்குத் தாராளமாகப் பிரயோகிக்க வேண்டும். "சினிமா முதலாளிகளின்" கூக்குரலை பொருட்படுத்தாமல் மக்களின் நலனை மனதில் கொண்டு தங்கள் கடமையை அவர்கள் செய்ய வேண்டும்.

வெங்கடராமன்.

திருவனந்தபுரம்
22—9—48

## நாணய மாற்றல்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

எங்கள் திருவிதாங்கூரில் இந்திய நாணயங்களும், திருவிதாங்கூர் நாணயங்களும் புழக்கத்தில் இருக்கின்றன. ஆனால் இங்குள்ள கஜானாக்களிலும், ஆபீஸ்களிலும் திருவிதாங்கூர் ரூபாய், பணம், சக்கரம் காசு.—இந்தக் கணக்கைத்தான் வைத்துள்ளனர். திருவிதாங்கூர் ஒரு ரூபாய்க்கும் இந்திய யூனியன் ஒருரூபாய்க்கும் காசு 8 (காலணா) வித்தியாசம் இருக்கிறது. இதனால் இந்திய யூனியன் ரூபாயைத் திருவிதாங்கூர் ரூபாயாக்கவும், திருவிதாங்கூர் ரூபாயை இந்தியயூனியன் ரூபாயாக்கவும் மிகவும் சிரமமாக இருக்கிறது. இதை சர்க்கார் உடனடியாகக் கவனிக்குமா?

ஆ. கணபதி.

தஞ்சை
23—9—48

## சர்க்கார் கவனிக்குமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு

**பியூன்கள்:** சர்க்கார் நிர்ணயித்த நேரத்தைத் தவிர பெரும்பாலான வெளியூர் காரியாலயங்களில் இவர்கள் காலை 7-மணி முதல் இரவு 8, 9 மணி வரை வேலை செய்கிறார்கள். சொற்பச் சம்பளம் வாங்கும் இவர்கள் ஆபீஸர்கள், மானேஜர்கள், தலைமைக் குமாஸ்தாக்கள் முதலியோரின் சொந்த வீட்டு வேலைகள், அதிகாரிகளின் செல்வப் புதல்வர்களைப் பள்ளிக்கு அழைத்துச் செல்லுதல் முதலான வேலைகளைச் செய்தால் தங்கள் வீட்டு வேலைகளுக்கு யாரை நியமிப்பது? செய்ய மறுத்தாலோ சீட்டுக் கிழிந்துவிடும்.

**டைப்பிஸ்டுகள்:** கல்வி ஆபீஸ், ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸ், கூட்டுறவு ஆபீஸ் முதலிய ஆபீஸ்களில் வேலை செய்வோர் இந்த ரகத்தினர். இவர்களில் பெரும்பாலோருக்கு விடுமுறை என்றால் என்ன என்பதே தெரியாது. தப்பித் தவறி ஒரு விடுமுறை நாளில் வீட்டில் உட்கார்ந்து விட்டாலோ, ஆபீஸ் பியூன் உடனே வந்து விடுவார், கூப்பிடுவதற்கு! இரவில் லாந்தர் விளக்கின் கீழ்தான் வேலை செய்ய வேண்டும். ஆபீஸ் வேலை தவிர ஆபீஸர்களின் வேலையையும் பார்க்க வேண்டும். இவர்கள் ஒரு நாளைக்கு 10 மணிக்கு மேல் வேலை செய்தாலும் மேலதிகாரிகளுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை.

**குமாஸ்தாக்கள்:** சாதாரணமாக எல்லா ஆபீஸ்களிலும் வேலை செய்பவர்கள். இவர்கள் காலை 8 முதல் இரவு 8-மணி வரை வேலை செய்து விட்டு சைக்கிள்களிலும் பைகளிலும் வீட்டுக்குப் பைல்களை எடுத்து வருகின்றார்கள். —ஆபீஸ் ரிக்கார்டுகளை வெளியே கொண்டு போகக் கூடாது என்ற அரசாங்க விதியையும் - மீறி வேலையை முடிப்பதற்காக!

ஒரு சமயம் நமது மாஜி மந்திரி ஸ்ரீ சுப்பராயன் ஆபீஸில் 5-மணிக்கு மேல் வேலை செய்ய வேண்டாம், வீட்டிற்கும் பைல்களை எடுத்துச் செல்லவேண்டாம் என்று கூறியுள்ளார். இதை உண்மையாக்க நமது கனம் பிரதமரைச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

நி. சு. நாராயணன்.




[இன்கம்டாக்ஸ் காரியாலயத்தில் மேல் பதவிக்குச் செல்ல வேண்டியவர்களுக்காகச் சமீபத்தில் பரீட்சை நடத்தினார்கள்.]

திருநெல்வேலி
19—9—48

## நெல் கிடையாது!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

எங்கள் கிராமத்தில் வசிக்கும் மறவர்கள் அனைவரும் நிலங்களைப் பயிரிடும் விவசாயிகள். இவர்கள் நிலச் சுவான்களுக்கு நெல்லைக் கொடுக்காமல் அதன் விலையை (கண்ட்ரோல் விலைக்கும் குறைவாகத்) தருவதாக நோட்டெழுதித் தருகின்றனர். அந்த ரூபாயும் கடைசியில் கைக்கு வராமல் போய் விடுகிறது. அவர்களிடமிருந்து நிலத்தை இன்னொருவரிடம் ஒப்புவிக்க முடிவதில்லை. காரணம் ஒருவரும் துணிந்து பயிரிட முன் வருவதில்லை என்பதே. இவ்வாறு எங்களுக்கு நெல்லைக் கொடுக்காமல், அவர்கள் நெல்லைக் கறுப்பு மார்க்கெட்டில் விற்கின்றனர். எங்களுடைய நெல்லை எங்களிடமே கோட்டை எழுபது ரூபாய்க்கும் எண்பது ரூபாய்க்கும் விற்கும் அவர்களுடைய துணிச்சல்தான் என்னே! நிலச்சுவான்தார்கள் சாப்பாட்டுக்குக்கூட நெல் இல்லாமல் படும் அவதிதான் என்னே! இதற்கு ஏதேனும் வழி உண்டா?

எஸ். நாராயணன்.

கும்பகோணம்
21—9—48

## வரியும் தொல்லையும்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

இந்த வருஷம் எங்களூர் முனிஸிபாலிடியில் எங்கள் வீட்டு வரியை அதிகப்படுத்தி யிருந்தார்கள். எங்களுக்கு அவ்வளவு கொடுக்கச் சக்தியில்லை யென்று மனுச்செய்து கொண்டோம். எப்படி மனு எழுதுவது என்று வரி வசூல் செய்பவரிடம் கேட்டுக் கொண்டு அதன்படி எழுதி அனுப்பினோம். முனிஸிபல் அதிகாரிகளும் வந்து எங்கள் வீட்டைப் பார்வையிட்டு வரியைக் கொஞ்சம் குறைத்துப் போட்டார்கள். வரியும் கட்டியாகி விட்டது. வசூல் செய்பவர், என் தாயாரிடம் வந்து அவர் முயற்சி எடுத்துக்கொண்டதால்தான் வரியைக் குறைத்தார்கள் என்றும், தாம் சிரமப்பட்டதற்காக 15 ரூபாயாவது தமக்குக் கொடுக்க வேண்டுமென்றும் கேட்டார். என் தாயார் தனக்கு 15 ரூபாய்கொடுக்க சக்தி யிருந்தால் வரியைக் குறைக்கும்படி மனுசெய்து கொண்டிருக்க மாட்டேன் என்றும், தன்னைத் தொந்தரவு செய்ய வேண்டாமென்றும் சொன்னாள். அதற்கு அவர், தமக்குப் பணம் கொடுக்காவிட்டால் அடுத்த வருஷம் வரியை உயர்த்தி விடுவதாகவும், இன்னும் எவ்வளவோ மட்டமான வசைச் சொற்களால் வைதுவிட்டும் சென்றார். இது போன்ற அக்கிரமங்களைக் கவனிப்பார்களா?

வி. கல்யாணி.

சான்பிரான்ஸிஸ்கோ,
(அமெரிக்கா) 13—9—48

## கப்பலில் உணவு

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு

ஆண்டு தோறும் நம் நாட்டைவிட்டு மேல் நாடுகளுக்குக் கல்விக்காகவும் உத்தியோகத்திற்காகவும் நம்மவர்கள் செல்வது நாமறிந்ததே. அவர்களில் ஒரு சிலர் புலால் உண்பவராயும், ஒரு சிலர் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தவாறு தங்கள் உணவை மாற்றக்கூடிய சக்தியுடையவராயும் இருக்கின்றனர். ஏனெனில் மாமிசக் கலப்பற்ற உணவு சரியாகக் கிடைக்காமற் போனால், நாளடைவில் புலாலுணவு உண்ணக் கற்றுக்கொண்டு விடுகின்றனர்.

எனினும், தங்களுடைய தூய கொள்கையின் நிமித்தமோ அல்லது வேறு எக்காரணத்தாலோ புலாலுணவை அறவே உண்ணாமலும் பலர்களும் மேல்நாடு செல்கின்றனர் என்பது கண்கூடு. இதற்குத் தக்க சான்று நாம் தவப்பயனாகப் பெற்ற தலைவர் மகாத்மா காந்தியடிகளே போதும்.

இத்தகையோருக்குக் கப்பலில் செய்து கொடுக்கப்படும் காய்கறி போன்ற உணவு சிறிது சுவையுடன் அளிக்கப்படுமானால், எவ்வளவு சௌகரியமாயிருக்கும்?

நம் முதல் இந்தியக் கப்பலான 'ஜல உஷா'வில் மாமிசக் கலப்பற்ற உணவு வேண்டுவோருக்கு நல்ல உணவு தயாரித்து அளிப்பது பெரிதும் பாராட்டுதற்குரிய விஷயம்.

கல்பகம் சுப்ரமணியம்.

தேவகோட்டை
16—9—48

## இதன் அர்த்தம் என்ன?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

சமீபத்தில், தேவகோட்டையிலுள்ள என் நண்பர் ஒருவர் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அன்று மாலை (12—9—48) 5-மணி சுமாருக்கு நானும் என் நண்பரும் கொழும்பு வானொலி நிகழ்ச்சியைக் கேட்டுக் கொண்டிருந்தோம். அப்போது கொழும்பு ரேடியோவில் நண்பர் ஒருவர் ஜனாப் ஜின்னா அவர்களது மரணம் குறித்து மிகவும் உருக்கமாகத் தமிழில் சொற்பொழிவு ஆற்றிக் கொண்டிருந்தார். எங்களுக்கும் மிகவும் வருத்தமாகவே இருந்தது. ஆனால் பேச்சின் இறுதியில் ஒரு குத்தலான வார்த்தையை நண்பர் உபயோகப்படுத்தியது அவ்வளவு பொருத்தமாக இல்லை. அதாவது காயிதே ஆஜம் ஜின்னா அவர்கள் நிம்மதியாகவே ஆண்டவன் அடி சேர்ந்தார். "பகைவனால் சுட்டுக் கொல்லப் படவில்லை" என்று தம் சொற்பொழிவின் முடிவில் கூறினார். அப்படியானால் இதன் அர்த்தம் என்ன?

கா. ஷண்முகம்.

அம்மாதிரி உத்தம மரணம் காயிதே ஆஜம் ஜின்னாவுக்கும் கிட்டவில்லையே என்ற வருத்தமாயிருக்கலாம். — ஆசிரியர்.

---

* இந்த இதழில் வெளியாகியிருக்கும் வாட்டாமோறுக் கடிதங்களில் மதுரை டி. வி. தம்புசாமி அவர்கள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.

REGD. No. M. 4392

# எவர் ஸில்வர் பாத்திரங்கள்

பம்பாய் தேவிதயாள் கம்பெனியார் தயார் செய்தது. வெள்ளி யின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை. பல புதிய விதமான உபயோகமுள்ள பண்டங்கள் வந்து குவிந்துள்ளன. இன்றே வந்து பாருங்கள்.




## ஸாம்ஸன் & கோ

8/22, பிராட்வே...மதராஸ்.